# இந்தி எதிர்ப்பு வரலாறு

புலவர் த. அழகரசன், M.A., B.Ed.,

# இந்தி எதிர்ப்பு வரலாறு
# HINDHI ETHIRPU VARALAARU

ஆக்கியோன் :
புலவர் த. அழகரசன், M. A., B. Ed.,
(புலவர் த. சுந்தரராசன்)

வெளியீடு :
வளனரசுப் பதிப்பகம்
9, வெங்கட்டராமன் தெரு
தேனாம்பேட்டை, சென்னை - 600 018.

# பதிப்பு விளக்கம்


| | |
|---|---|
| தலைப்பு | — இந்தி எதிர்ப்பு வரலாறு<br>HINDHI ETHIRPU VARALAARU |
| ஆசிரியர் | — புலவர் த. சுந்தரராசன் |
| மொழி | — தமிழ் |
| பதிப்பு | — முதலாவது |
| வெளியீடு | — ஏப்ரல் 1985 |
| உரிமை | — தங்கப்பன் நாடார் |
| தாள் | — **11.6 kg. White Printing** |
| அளவு | — 18 Cm. × 12·5 Cm. |
| எழுத்து | — 10 புள்ளிகள் |
| பக்கம் | — 52 + 4 |
| படிகள் | — 1100 |
| அச்சகம் | — மாங்காட் பிரிண்டர்ஸ்<br>2, கபூர் சாகிப் 2-வது தெரு<br>சென்னை - 600 014. |
| கட்டடம் | — கார்ட்போர்ட் |
| விலை | — நான்கு ரூபாய்கள் |
| பதிப்பாளர் | — வளனரசுப் பதிப்பகம்<br>9, வெங்கட்டராமன் தெரு,<br>தேனாம்பேட்டை, சென்னை-600 018 |

# முன் முழக்கம்

கா. அப்பாதுரை, க. மு. (ஆங்), க. மு. (தமிழ்),
கல். உ; விசாரத் (இந்தி)

முத்தமிழன்னைக்கு ஆயிரம் ஆண்டு ஒரு பகல்; ஆயிரம் ஆண்டு ஓர் இரவு; இத்தகைய நாள்கள்-பல மாதங்கள்-ஆண்டுகள்-ஊழிகள் பல கடந்து இறைவனைப்போல அத்தேவியும் என்றுமுளதென் தமிழாக வாழ்கிறாள்.

முன் ஒரு பகலில் சோழன் கரிகால்வளவன், சேரன் இமய வரம்பன், பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆகிய மூவரசரும் இமய நெற்றியில் மூவரசுக் கொடி பொறித்தனர் ; இலங்கையைப் பம்பரமாகச் சுழற்றினர். இந்தியாவின் மேற்கடலும், கீழ்க்கடலும் ஆண்டனர். தென்கிழக்காசியா முழுவதும் தமிழ்ப் பந்தலிட்டுக் களி நடமாடினர்.

ஓர் ஆயிரமாண்டு இரவுக்குப்பின் மறு ஆயிரமாண்டுப் பகலில் இராசராசன் பெற்ற களிறு எனப்படும் சோழன் இராசேந்திரன் மீண்டும் இலங்கையைக் காற்பந்தாடி, இமயத்தைச் செண்டாலடித்துத் திருகி, தென்கிழக்கு ஆசியா வெங்கும் உலகம் காணக் கடற் பேராட்சி பரப்பி ஆண்டான். அவன் மரபின் முன்னும் பின்னும் பாண்டியப் பெரு மரபினரும் இதுவே ஆற்றினர்.

அடுத்த ஆயிரம் ஆண்டு இரவுத் துயிலின்போது ஆரியம், மொகலாயம், ஆங்கிலம் விளையாடின.

இனியொரு பகலின் விடியற்போது நம்முன் இப்போது தொடங்கியுள்ளது.

உலக விடுதலை இயக்கங்களின் படிப்பினையிலிருந்து எழுந்துள்ள இயக்கம், இந்தி எதிர்ப்பு இயக்கம் என்னும் எரிமலை எழுச்சியின் வரலாறு!

ஆறுதாண்டி காவிரியாய்த் தொடங்கி அகண்ட காவிரியாய், கடலொடு கடலாய் வளரவிருக்கும் அவ்வியக்கத்தின் வரலாறு, அதில் இதுவரை நடந்துள்ள 1938-1939 ஆண்டைய முதல் பெரும்போர். 1942, 1946, 1948 என அலை அலையாக எழுந்த இடைப் போராட்டங்கள். 1965-இல் எழுந்த இரண்டாம் பெரும்போர் 1978—1985 வரை அலை அலையாக மோதிவரும் இடைப் போராட்டங்கள் ஆகிய வரலாறுகளையும், அதில் ஈடு பட்டு உயிர் நீத்த தெய்வங்களின் புகழ் ஒளிச் சிறப்பையும், அதில் சாதனை புரிந்த-புரிகிற-புரிய இருக்கிற தவச் செல்வர், செல்வியரின் எழுச்சிக் குரல்களையும் புலவர் த. அழகரசன், க.மு; கல். இ; இச்சிற்றேட்டில் கடல்களை அடக்கிய கடுகெனத் தந்துள்ளார்.

பிறப்புக்கு முன் நச்சுக் கொடி விழுவதை யாவரும் அறிவர். ஆனால், இந்திய விடுதலை இயக்கம் பிறக்குமுன்னும், பிறப்பின் போதும், பிறப்பின் பின்னரும் நச்சுக்கொடி என்று உணராமலே வரும் நச்சுக் கொடியைத் தின்று தின்று அவதிப் பட்டும், அதன் படிப்பினைக் காணாது அலமருகிறது.

விடுதலைக்கு முன்பே இந்தி மொழி ஆதிக்கம் என்னும் நச்சுக்கொடி காரணமாகவே ஒரே இந்தியா, பாகித்தான், இந்தியா என்று இரண்டாகப் பிளவுற்றது. அது மட்டுமா ?

இந்தியாவின் குட்டியாகிய பாகித்தான், இந்தியாவைப் போலவே உருது மொழி ஆதிக்கம் என்ற கிளை நச்சுக்கொடி

காரணமாக, பாகித்தான், வங்காள தேசம் என்று இரண்டாகப் பிரிந்து இயங்குகின்றன.

இது மட்டுமா? செர்மன் மொழியை இட்லர் ஊழியில் செர்மானியர் செக்மக்கள் மீது புகுத்தியதாலேயே டாக்டர் மசாரித் தலைமையில் மொழிப் போராட்டமாடி செக்கோசுலோ வேகியா தனி நாடு கண்டது.

ஆங்கில மொழி ஆதிக்கத்தை அயர்லாந்தின்மீது புகுத்திய தால்தான் ஆறு நூற்றாண்டுகள் மொழிப் போராட்டமாடி அயர்லாந்து திவேலரா என்னும் தெய்வீகத் தலைவர் தலைமை யில் விடுதலை பெற்றது.

இந்தியாவுடன் இணையாக விடுதலை பெற்ற இலங்கை விடுதலைக் காலம் முதல் சிங்கள ஆதிக்கத்தைத் தமிழ் ஈழ மக்கள்மீது மேன் மேலும் சுமத்தித் தமிழனத்தை அழிப்பதனால் தான் சிங்கள ஆட்சியிலிருந்து விலகித் தமிழ் ஈழம் தன்னாட்சி நாடி ஒரு பாரதப் போரே ஆடுகிறது.

மனிதன் தன் உரிமையை மனிதன் சுரண்டாமல் தடுப்பவை மக்களாட்சி, சமதருமம், பொதுவுடைமை ஆகிய இயக்கங்கள்!

நாட்டை நாடு சுரண்டாமல் தடுப்பது தேசியம்!

இந்த இரண்டிலும் கொடுமையானது மொழிச் சுரண்டல். ஏனெனில் மக்களாட்சி முறையோ, சமதருமமோ, பொதுவுடை மையோ, தேசியமோ எதுவும் மொழிச் சுரண்டலைத் தடுக்க முடியாது!

போலி ஒருமைப்பாடு பேசியே மொழி ஏகாதிபத்தியங்கள் உரிமையை மறுக்கின்றன. மொழியுரிமைச் சுரண்டலைத் தடுக்க அமெரிக்கா கூடப் பிரிவினை தவிர வேறு வழி எதையும் இன்றும் கண்டிருக்கவில்லை!

உலகின் மற்றெல்லா மொழிப் பிரச்சனைகளைவிட, தமிழர் மொழிப்பிரச்சனை மிகக் கொடுமையானது.

உலகில் எந்த மொழிக்கும் முற்பட்டே ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக ஆட்சி மொழியாக, இலக்கிய மொழியாக, சமய மொழியாக, விஞ்ஞான மொழியாக, கல்வி மொழியாக இருந்து உலகின் மற்ற மொழிகளுக்கு அன்றும், இன்றும் இனியும் வழிகாட்டியாய் இருப்பது தமிழ் !

அதன் கேடு, இந்தியாவின் கேடாய், உலகின் கேடாய் மலரவல்லது என்பதனை உலக வரலாறு காட்டவல்லது. புலவர் த. அழகரசன் இவ்வரலாற்றைத் தொடக்க முதல் இந்நாள் வரை விளக்கமுற எடுத்துரைத்துள்ளார். அத்துடன் இந்திப் பிரச்னையில், போரின் முடிவாக அல்லது போரில்லாமலே, நல்ல தீர்வு ஏற்படும் வழிகளையும் ஏட்டிறுதியில் தெளிவாகக் கூறியுள்ளார்.

நேரு பெருமான் ஆங்கிலப் பயன்பாடு பற்றிய வாக்குறுதி சட்டமாக்குவது, அறிஞர் அண்ணா காலத்திலிருந்து, அதற்குச் சற்று முன்பிருந்தே கூட தமிழ்நாடு அரசு ஏற்று நடத்தி வருகிற இருமொழித் திட்டத்தை இந்தி பேசாத மாநிலங்கள் அளவிலேனும் சட்டமுறைப்படி ஒத்துக்கொள்வது. தமிழையும் இந்தியுடன் இணை ஆட்சி மொழியாகச் செய்வது என்பவையே அவை.

பன்மொழி, பல சமயம், பல பண்பாடுடைய இந்தியாவின் தேசிய ஒருமைப்பாடு இப்பன்மை மேல் ஓர் அயல்மொழி அல்லது தனி மொழியைச் சமயத்தை, பண்பாட்டைச் சுமத்தும் ஒருமைப்பாடாய் இருக்கப்படாது. எல்லாம் சரி சமமாகப் பாராட்டப்பட்டு ஏற்றமைத்த ஒருமைப்பாடாக இருத்தல் வேண்டும். அதாவது பன்மைக்கு உட்பட்ட எதிர்மறைத் தேசியமாக நிறைவற்ற தேசியமாக இராமல், ஆக்கத் தேசியமாக, பல் வண்ணத்தேசியமாக இருத்தல் பெருநலம் பயக்கும்.

முற்காலத்தில் இந்தியாவின் தேசியம் என்பது அரசியல் ஆதிக்கத் தேசியமாய் அமையாமல் ஒரு தேசிய நாகரிகமாய் இருந்தது. ஆனால், படிப்படியாக அரசியல் ஆதிக்கத்தால்

உலகெங்குமே தமிழர் மொழியுரிமை சமய உரிமை, கலை பண்பாட்டு உரிமைக்கு வகையில்லாமல் உள்ளது.

இந்தி எதிர்ப்பு இயக்கம், அனைத்துலகத் தமிழர் பண்பாட்டு இயக்கம். உலகில் தமிழினம் வாழவும், பிற இனங்களை வாழ்விக்கவும் உரிமை பெறுவதற்கும் இன்றியமையாததாய் இயல்வது ஆகும். ஆசிரியரின் இந்த ஏடு போன்ற ஆய்வு நூல்கள், அவ்வகையில் தமிழர்க்குத் தமிழ் நலம் பற்றியும் உலக மக்களுக்குத் தமிழர் பற்றியும், நல்லறிவும் நல்ல தொடர்பும் வளர்த்தல் இன்றியமையாதவையாகும்.

14-4-1985 கா. அப்பாதுரை

# கருத்துரை

பேராசிரியர் **நா. சஞ்சீவி**, எம்.ஏ., பி.எச்டி;
தமிழ் இலக்கியத்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக்கழகம்.

இந்தி எதிர்ப்பு வரலாறு என்ற தலைப்பில் புலவர் த. சுந்தரராசன் அவர்கள் தொகுத்துள்ள வரலாற்று நூலைப் படித்தேன்.

இந்தி ஆதிக்கத்தை எதிர்ப்பது வேறு, இந்தியை இழிப்பது வேறு. இந்தி ஆதிக்க எதிர்ப்பு வலுப்பெறும்போது இந்தியை இழிக்கவும் பழிக்கவும் தோன்றல் இயற்கை. இந்த நிலை ஏற்படாமல் காக்க வேண்டிய பெரும் பொறுப்பு இந்தி ஆர்வலர்க்கே அதிகம்.

இந்தியை எதிர்ப்போருள் தலைவர்கள் பலர் ஆங்கில அடிமைகளாகவும் உள்ளனர்; பல்கலைக் கழகங்களில் தமிழ் பயிற்சி மொழி ஆவதை எதிர்க்கின்றனர். இக்கொடுமையை ஒழிப்பது எப்படி? இந்தி ஆதிக்கத்தைத் தடுக்க முதலில் தமிழகத்தில் எல்லா நிலைகளிலும் தமிழே ஆட்சி மொழியாகவும் பயிற்சி மொழியாகவும் ஆதல் வேண்டும்.

பேரறிஞர் அண்ணாவின் இருமொழிக் கொள்கையே இந்திய ஒருமைப்பாட்டை வளர்க்கும்; வாழ்விக்கும். இந்திய

மக்கள் அனைவரும் தத்தம் தாய் மொழிகளைத் தனிச்சிறப்புடன் வளர்த்து உலக மொழியாகிய ஆங்கில வழி கொடுக்கவும் கொள்ளவும் இரு மொழிக் கொள்கையே ஏற்புடையது சமநீதிச் சான்று.

விருப்பமுடையோர் எத்தனை மொழிகளை வேண்டுமானாலும் கற்கலாம்; கற்பிக்கலாம். தேவையற்ற கட்டாயம் என்ற கழுத்தறுப்பு இல்லாத நிலையில் விருப்பமும் தனித்திறமைகளும் உடையோர் பன்மொழி கற்றல் பயனுடையதே. மறைமலை அடிகளார், பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் போன்றோரின் தமிழ்த் தொண்டுகள் சிறப்பு வாய்ந்தன என்பதை மறப்பதற்கோ மறுப்பதற்கோ இல்லை.

மொழி ஆதிக்கத்தின் மூலகாரணம் முதலாளித்துவப் பொருளாதார அமைப்பே என்பதும் கருதத்தக்கது. மனிதனை மனிதன் சுரண்ட முடியாத சமதர்ம அமைப்பில் மாநிலத்தை மாநிலம் சுரண்டுவது என்பதும் இயலாததுதானே!

ஆங்கிலம் இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் ஏற்றுக் கொண்டுள்ள பதினைந்து மொழிகளோடு சேர்ந்து பதினாறாம் மொழியாகவேனும் ஆதல் அறம். நேப்பாளிக்கு உள்ள உரிமையும் தகுதியும் ஆங்கிலத்திற்கு இல்லையா?

வாழ்வுக்கு முதுகெலும்பு வரலாறே. அவ்வகையில் புலவர் த. சுந்தரராசன் நன்முயற்சிகள் வளர்க! வாழ்க! வெல்க!

ந. சஞ்சீவி

# அணிந்துரை

பேராசிரியர் செ. கந்தப்பன், எம். ஏ.

புலவர் அழகரசன் எழுதியுள்ள "இந்தி எதிர்ப்பு வரலாறு" என்னும் இச்சிறு நூல் போற்றத்தக்க முயற்சி.

வேற்றுமொழி பேசுகிற மக்களை வெறுப்புடன் பார்க்கிற இயல்பு தமிழரிடம் என்றும் இருந்ததில்லை. பிற மொழிகளைப் பழித்துப் பேசுவதும் தமிழர் அறியாத ஒன்று. எனினும், இந்த உயரிய பண்பே அவர்தம் மொழிக்குப் பகையாகிவிட்டதோ என்று அஞ்சத்தக்க அளவுக்கு, பல்லவர் காலம் தொடங்கி நாளதுவரை ஏதாவதொரு அந்நியமொழி ஆதிக்கம் தமிழைத் தாக்கியே வந்துள்ளது.

இசையில் தெலுங்கும் வழிபாட்டில் வடமொழியும் அரசியலில் இந்தியும் இன்று நம்மை ஆளும் மொழிகளாகி விட்டன!

இந்திப்போர் நெடியது; தியாகத் தழும்புகளைத் தன்னகத்தே நிரம்ப கொண்டது. முழுமையாகத் தர இச்சிறு நூல் இடம் தராது. எனினும் சில முக்கிய கட்டங்களை நிரலாகத் தொகுத்து அளிக்கிறது.

மக்களாட்சி என்கிற தத்துவமே மக்கள் மொழி இன்றேல் பட்டுப் போகும்! இந்த வகையில் இன்று இந்தியத் திருநாட்டில்

மூன்றில் ஒரு பங்கு மக்களே மக்களாட்சியின் வாய்ப்பினைப் பெறுகின்றனர்! ஏனைய இரு பங்கு மக்கள் ஊமை வாழ்வு வாழ்கின்றனர்!

ஆங்கில அந்நிய ஆதிக்கத்தை விடவும் கொடுமையான ஓர் அடிமை நிலையாகும் இது!

இந்தக் கொடுமையில் இருந்து விடுபடும் நாளே, தமிழனின் உரிமை வாழ்வு தழையும் நல்ல நாளாக இருக்க முடியும். இதனை உணரும் திறனும் அற்று, அடிமைத்தளையில் ஊறிப் போன படித்த பாமர மக்களைத் திருத்துவதே இன்று நமக்குள்ள தலையாய பணி!

தாய்மொழியில் அனைத்து நிர்வாகமும் இயங்காத ஆட்சி 'தேசியம்' அல்ல; அது 'பர தேசியம்!'

இந்நூலின் முடிவில், 'இறுதித்தீர்வு' என்கிற தலைப்பின் கீழ் ஆசிரியர் கீழ் வருமாறு ஒரு குறிப்பைத் தருகிறார்:

> "ஒரு மாநில எல்லைக்குள் இயங்கும் அரசு நிறுவனங்கள் அனைத்திலும் — அந்த மாநிலத்தின் ஆட்சி மொழி மட்டுமே அலுவல் மொழியாகச் செயல்பட வேண்டும்"

இது ஒன்றும் கடினமான பணியல்ல. இப்படித்தான் செயல்பட வேண்டும் என்கிற மனப்பக்குவம் மத்திய அரசுக்கு ஏற்பட்டுவிட்டாலே போதும். ஒரு நாளில் இதைச் செயல் படுத்திவிடலாம்!

அண்ணாவால் ஈன்று எடுக்கப்பட்டு, அருங்கலைஞர் செவிலித் தாயாக இருந்து வடிவங்கொடுத்து வளர்த்த மாநில சுயாட்சிக் கோட்பாடு ஏற்கப்பட்டால், இது இன்னும் எளிதாக முடியும்.

அன்பன்,
செ. கந்தப்பன்

# முகவுரை

கவிஞர் முத்துலிங்கம், எம். எல். சி.

ஈழத் தமிழர்களை இரத்த ஆற்றில் மிதக்கவிட்டு வரும் சிங்கள வெறிக்கும்பலை எதிர்ப்பது தமிழினத்திற்கு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் இந்தித் திணிப்பை எதிர்த்துப் போரிடுவதும்!

உலகில் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு உலகப் பொது நூலாக விளங்குகின்ற திருக்குறளை—எம்மதமும் ஏற்றுக்கொள்ளக்கூடிய கருத்துக்களை உள்ளடக்கிய திருக்குறளை தேசிய நூலாக ஏற்க இந்திய அரசு மறுத்துவிட்டபோது, மூன்று மாநிலங்களில் மட்டுமே பேசப்பட்டு வருகிற இந்தி மொழியை இந்தி பேசாத ஏனைய மாநிலங்கள் எப்படி தேசிய மொழியாக ஏற்றுக்கொள்ளும்? இதை மத்திய அரசுக்கு நாம் உணர்த்த வேண்டும்.

இதில் உத்திரப் பிரதேசத்துக்காரர் பேசுகின்ற இந்திக்கும் மத்தியப் பிரதேசத்துக்காரர் பேசுகின்ற இந்திக்கும் வேறுபாடு இருக்கிறது. இந்தி பேசுகிறவர்களுக்குள்ளேயே இவ்வளவு வேறுபாடு இருக்கும்போது அதை ஆட்சி மொழியாகத் திணித்தால் இந்தியத்துணைக் கண்டத்தில் எத்தனையோ வேறுபாடுகளும் மாறுபாடுகளும் ஏன் கூறுபாடுகளும்கூட ஏற்பட்டுவிடும்.

இந்தி பேசுகின்றவர்கள் 32 சதவிகிதம்தான். 68 சதவிகிதம் பேர் வெவ்வேறு மொழிகளைப் பேசுகின்றவர்கள். அதிக அளவில் கூட இந்தி பேசுகின்றவர்கள் இல்லை. ஆனால், இந்திய அரசு, பெரும்பான்மையானவர்கள் இந்தி பேசிகிறார்கள்; ஆதலால் ஆட்சிமொழியாக இந்திதான் வரவேண்டுமென்று கூறுகிறது. இதை நாம் வாதத்திற்காக ஒப்புக்கொண்டால்கூட பெரும்பான்மையானவர்கள் பேசுகிறார்கள் என்பதற்காக இந்தியைப் பொதுமொழியாக ஏற்றுக்கொள்ள வேண்டுமா?

தொன்மைச் சிறப்பு. மென்மைச் சிறப்பு, எளிமைச் சிறப்பு, இலக்கணச் சிறப்பு, இலக்கியச் சிறப்பு பெற்ற மொழியா இந்தி மொழி?

கடையில் விற்கக்கூடிய அரசின் அனுமதி பெற்ற சாரா யத்தைவிட கள்ளச்சாராயம் விலை மலிவாக இருக்கிறது என்று பலபேர் வாங்கி அருந்துகிறார்கள். பெரும்பாலானவர்கள் கள்ளச் சாராயத்தைத்தான் வாங்கிக் குடிக்கிறார்கள் என்பதற் காக கள்ளச்சாராயத்தைத் தேசிய பானமாக அரசு அங்கீகரிக் குமா? அதைப்போல் பெரும்பாலானவர்கள் பேசுகிறார்கள் என்பதற்காக எத்தத் தகுதியும் இல்லாத இந்தி மொழியை ஆட்சி மொழியாக எப்படி ஏற்றுக்கொள்வது?

எல்லா மாநிலங்கள் மீதும் இந்தியப் பேரரசு மதிப்பு வைத்திருக்குமானால் இந்தியாவிலுள்ள அனைத்து மொழி களையும் தேசிய மொழிகளாக்க வேண்டும். ஏதேனும் ஒரு மொழியைத்தான் தேசிய மொழியாக்க வேண்டுமென்றால் அதிலும் இந்தியாவிலுள்ள ஒரு மொழியைத்தான் தேசிய மொழியாக்க வேண்டு மென்றால் அதற்குத் தகுதிவாய்ந்த மொழி தமிழ் மொழி ஒன்றுதான். ஆக தமிழ் மொழியைத்தான் தேசிய மொழியாக்க வேண்டும், ஆனால், இந்தி வெறியர்கள் இதை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். அதனால் மீண்டும் தமிழ் நாட்டில் மட்டுமல்ல இந்தி பேசாத மற்ற மாநிலங் களிலும் இந்தி எதிர்ப்புப் போர் தொடங்கப்போகிறது!

புலவர் அழகரசன் எழுதிய இந்தி எதிர்ப்பு வரலாறு என்ற இந்நூல் எனது கருத்தைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. புலவர் அழகரசன் பழகுதற்குத் தமிழைப்போல் இனிமையானவர். திருக்குறள்போல் அடக்கமானவர்; புற நானூற்றைப்போல் வீர உணர்வுகள் படைத்தவர்; சங்க இலக்கியங்கள் போல் இயற்கையான இயல்புடையவர். இவர் எழுதிய இந்த நூல் தமிழ்ப்பற்றாளர்கள் ஒவ்வொருவரின் கையிலும் தவழ வேண்டிய நூல்.

தமிழுக்காக எத்தகைய தியாகத்தையும் செய்யக்கூடிய உணர்வு படைத்த அழகரசனின் இந்தி எதிர்ப்பு வரலாற்றுக்கு நான் முகவுரை கொடுப்பதில் பெருமகிழ்ச்சியடைகிறேன். பொங்குக இந்தி எதிர்ப்பு! மங்குக இந்தி ஏகாதிபத்தியத் திணிப்பு!

முத்துலிங்கம்

# பாராட்டுரை

பேராசிரியர் தி. சு. கிள்ளிவளவன், எம். ஏ.

தமிழகத்தில் 'இந்தி எதிர்ப்பு' என்பது நீண்ட நெடிய வரலாறு படைத்தது. புலவர் அழகரசன் இந்த வரலாற்றினை நூல் வடிவமாக வெளிக்கொணர்ந்திருப்பது பாராட்டுக்குரியது. மிகவும் துணிச்சலான முயற்சி.

தமிகத்தில் இந்தித் திணிப்புக்கு முதன் முதல் விதை யூன்றியவர் ராஜாஜி அவர்கள்தாம். 1938-ம் ஆண்டில் அன்றைய சென்னை ராஜதானியின் பிரதமராக இருந்த சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் உயர்நிலைப் பள்ளிகளில் இந்தியைக் கட்டாய பாடமாகக் கொண்டு வந்தார்.

இந்தியை எதிர்த்து காவி கட்டிய - துறவிகளும், தமிழறிஞர்களும், தேசியவாதிகளும் தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணு போன்றவர்களும் இந்திக்குக் கடுமையாக எதிர்ப்பு தெரிவித்தனர். துறவிகளும், தமிழறிஞர்களும், அரசியல்வாதிகளும், தேசியவாதிகளும் சிறையிலடைக்கப் பட்டனர்.

''இந்திக்கு இவ்வளவு எதிர்ப்பு ஏற்படும் என்று தெரிந் திருந்தால் இந்தியைக் கொண்டு வந்திருக்கமாட்டேன்'' என்று பின்னர் ராஜாஜி அவர்களே சொல்லும் அளவுக்கு இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடைபெற்றது.

மீண்டும் ஒரு போராட்டம் 1948-ல் தந்தை பெரியார் அவர்களது திராவிடர் கழகம் சென்னையிலும், குடந்தையிலும் இந்தியை எதிர்த்துத் தொடர் மறியல் போராட்டம் நடத்தியது. போராட்டத்துக்கு பேரறிஞர் அண்ணு அவர்கள் 'தளபதி'யாக இருந்து போராட்டத்தை நடத்தினர். அன்றிலிருந்து அவர் தளபதி அண்ணுதுரை என்றே அழைக்கப்பட்டார்.

அதனை அடுத்து மத்தியில் ஆட்சிமொழிச் சட்டம் அமுல்படுத்தப்பட்டபோது பேரறிஞர் அண்ணா தலைமையிலான தி. மு. க. இந்தி எதிர்ப்புப் போராட்டம் நடத்தியது.

1938-ம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் தாளமுத்து, நடராசன் என்ற இரண்டு இன்னுயிர்களை நாம் விலை கொடுத்தோம். தொடர்ந்து நடைபெற்ற இரண்டு போராட்டங்களிலும் ஆயிரக்கணக்கானோர் சிறையிலடைக்கப் பட்டனர். பலர் போலீசாரின் அடக்குமுறைக்குத் தங்கள் இன்னுயிரை ஈந்தனர்.

இந்தி எதிர்ப்புப் போராட்டம் 1938-ல் தொடங்கியது. இன்னமும் தொடர்கிறது. போராட்டம் முடியவில்லை.

புலவர் அழகரசன் அவர்கள் இந்திப் போராட்டங்களில் நேரிடையாகப் பங்கு கொள்ளும் வாய்ப்போ அதற்குரிய வயதோ அவருக்கு இல்லையானாலும் அவரது தமிழார்வம் 'இந்தி எதிர்ப்பு' பற்றிய ஒரு வரலாற்றினை எழுதும் துணிச்சலைத் தந்திருக்கிறது.

அவரது துணிச்சலைத் தமிழ் மக்கள் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள். இந்த நூலில் முழுமையான வரலாறு இடம் பெறாவிட்டாலும் அவரது சக்திக்கேற்ற, இந்தச் சிறு முயற்சி 'இந்தி எதிர்ப்பு' பற்றிய வரலாற்றினை ஓரளவுக்கேனும் எதிர்காலச் சந்ததியினர் தெரிந்துகொள்ளும் அளவுக்கு ஒரு கையேடாக அமைந்துள்ளது.

அவரது இந்த முயற்சிக்குத் தமிழ்ச் சமுதாயம் என்றென்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது. தமிழ்ப்பெருங்குடி மக்கள் அவரது முயற்சிக்கு ஆதரவு அளிக்கும் வகையில் இந்த நூலினை வாங்கி ஆசிரியர் புலவர் அழகரசன் அவர்களுக்கு மேலும் பல நூல்களை எழுத ஊக்கம் அளிப்பார்கள் என்று பெரிதும் நம்புகிறேன்.

தி. சு. கிள்ளிவளவன்

# வாழ்த்துரை

**மிசா. ஆர் கணேசன்**, எம்.ஏ, பி,எல், எம்.எல்.சி,
17, வேளாளத் தெரு, புருசைவாக்கம்,
சென்னை - 84.

பேரன்புடையீர்

தங்களது இந்தி எதிர்ப்பு வரலாறு என்ற நூல் கிடைக்கப் பெற்றேன். நூல் சிறிய அளவில் இருந்தாலும் தமிழ் மக்கள் தம் ஊனோடு, உதிரத்தோடு ஒன்றிவிட்ட ஆதிக்க இந்தி எதிர்ப்பு உணர்வினைத் தூண்டுகின்ற ஓர் அரிய திறவு கோலாகவும், விடுதலைக்கு முன்பு 1926-ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை தந்தை பெரியார் தொடங்கி வைத்த அந்த உணர்வின் சான்றாகவும் அமைந்திருப்பது பெருமைக்குரிய ஒன்றாகும்.

தறி கெட்டுப் போய்க்கொண்டிருக்கின்ற இளைஞர், மற்றும் மாணவர் சமுதாயம் ஒவ்வொருவரின் கையிலும் இருக்க வேண்டிய ஓர் அரிய படைப்பு இந்நூல். தமிழக இந்தி எதிர்ப்பு வரலாற்றுச் சாண்றுவணமாக இந்நூல் விளங்குகிறது என்பதில் ஐயமில்லை.

இதை ஆக்கித்தந்த ஆசிரியர் புலவர் த. அழகரசன், க. மு; கல். இ; அவர்களுக்கு என்பாராட்டுகள்.

இவண்

மிசா. ஆர். கணேசன்

# என்னுரை

இந்தி எதிர்ப்பு வரலாறு என்றும் இச்சிறு நூலினை எழுது முன்னர், எனக்குள் நானே வினாக்கணைகளைத் தொடுத்துப் பார்த்தேன். மேலும் சான்றோர்களின் அறிவுரைகளையும் பெற்றேன். அவர்களுள் பலர் தந்த ஊக்கம் என்னை நிலைப் படுத்தியது. சிலர் தந்த கருத்துகள் என்னை உலுக்கிவிட்டன. ஏதாவது உலுக்கல் தடந்துவிடுமாயின் தமிழன்னைக்கு என்னை ஒப்படைத்துக்கொண்டேன் என மகிழ்வேனே தவிர, சற்றும் வருந்திடேன்.

இந்தி எதிர்ப்பு வரலாற்றினை முழுமையாக எழுதுகின்ற தகுதியும் புலமையும் எனக்கில்லை என்பதை உணர்ந்தேன்; எனினும், இக்காலகட்டத்தில் 'இந்நூல் தேவையென உணர்ந்த மையால் எழுதினேன். இந்தி எதிர்ப்பு வரலாற்று உண்மைகள் பல விடுபட்டுப் போயின. விடுபட்ட வரலாற்றுச் சிறப்புகள் இரண்டாம் பதிப்பில் இடம் பெறும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆட்சி மொழிச்சட்டம் பற்றி சரியான பார்வை இல்லா தோர்க்கு, அரசியல் சட்ட வரைவுக்குழுவில் உறுப்பினராக இருந்த எல். கிருஷ்ணசாமி பாரதி அவர்களின் கருத்துகளைப் பார்வைக்கு வைக்கிறேன்.

"அரசியல் நிர்ணய சபை உறுப்பினர் என்ற முறையில் அரசியல் சட்டத்தில் நான் கையெழுத்து இட்டது உண்மையே. ஆனால், காங்கிரசுக் கட்சி உறுப்பினர் எந்தச் சூழ்நிலையில் இருந்தோம் என்பதைப் பொதுமக்கள் நன்கு உணரவேண்டும், எங்கள் காங்கிரசுக் கட்சிக் கூட்டத்தில், பல நாள்கள் நடந்த காரசாரமான வாக்கு வாதத்திற்குப் பிறகு இந்தி வேண்டுமா? வேண்டாமா? என்பது பற்றி நடைபெற்ற வாக்கெடுப்பில் இரண்டு பக்கமும் சமமான வாக்குகள் கிடைத்தன. தலைவர் உடனே கூட்டத்தை ஒத்தி வைத்துவிட்டார். அடுத்த

முறையும் விவாதம் வளர்ந்தது. பிரச்சனை உருவாகியது. இம்முறையும் சமவாக்குகளே கிடைத்தன, எனினும் தலைவர் தம்முடைய சாதகவாக்கை (Costing Vote) இந்திக்கு ஆதரவாக அளித்துவிட்டார். கட்சிக் கட்டுப்பாடு எங்களை இப்போது உள்ள சட்டத்திற்கு வாக்களிக்குமாறு செய்துவிட்டது.

இதுதான் இந்திக்குச் சொந்தம் கொண்டாடும் விதம். ஏமாந்தபோது வந்து நுழைந்துவிட்டது. ஏய்த்துவிட்டு எல்லாம் நானே! எங்கும் நானே என்கிறது இந்தி.

வெள்ளையனை விரட்டிய மகிழ்ச்சியில் மூழ்கி இருந்த மக்கள் பிறிது எதையும் கவனிக்க இயலாது இருந்தபோது இந்தச் சதி நடந்துவிட்டது.''

7-4-85 அன்று 'இந்தியன் எக்ஸ்பிரஸ் இதழில் கிருஷ்ணபாரதி எழுதியுள்ள கடிதத்தையும் குறிப்பிடுவது சாலப் பொருத்தமென நினைக்கிறேன். கடித வடிவமாவது.

''பஞ்சாப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் பேசிய குடியரசுத் தலைவர் அவர்கள் 'தேசிய மொழியான இந்திக்கு உரிய இடம் தரப்படவேண்டும் என்று கூறியதாகவும், சுதந்திரம் பெற்று 36 ஆண்டுகள் ஆகியும் இந்திக்கு உரிய இடத்தைப் பெற முடியாமல் இருப்பதைக் கண்டு வருந்திய தாகவும், பத்தாண்டு காலத்திற்கே வைத்திருக்கப்பட வேண்டிய ஆங்கிலம் இன்றையத்தினம் கூடவும் அடிமைத்தனத்தின் சின்னமாக விளங்குகிறது. அதை அகற்றுமாறு கல்வியாளருக்கு வேண்டுகோள் விடுத்ததாகவும் செய்திகள் வந்துள்ளன.

அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்களுள் நானும் ஒருவன். அரசியல் சட்டத்தை உருவாக்கிய நாங்கள் இந்தியையோ, வேறு எந்த மொழியையோ வேறு எந்த மொழிகளையோ 'தேசிய'' மொழியாகவோ மொழிகளாகவோ ஏற்க வில்லை.

இந்தி மத்திய அரசின் நிர்வாகப் பணிகளுக்கு ஆட்சி மொழியாக மட்டுமே ஏற்பட்டது. ஆங்கிலம் இந்தியக் குடியரசின் ஆட்சி மொழியாகப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிரகடனம் செய்யப்பட்டது. குடியரசுத் தலைவர் கூறுவது போலப் பத்தாண்டுகளுக்கு அல்ல.

மேலும் இந்தி பேசாத மக்கள் விரும்பும்வரை ஆங்கிலம் இணைந்து அல்லது கூடுதல் ஆட்சி மொழியாக நீடித்துப் பயன்படுத்தப்படும் என்று அம்மக்களுக்குப் பண்டித நேரு வாக்குறுதி தந்துள்ளார்கள்.

அடிமைத்தனத்தின் கடைசிச்சின்னத்தை அகற்றுதல் என்பதன்மூலம், ஆங்கிலம் ஒட்டுமொத்தமாக நீக்கப்படும் என்று குடியரசுத்தலைவர் கூறுகிறாரா?

நம் நாட்டில் ஆங்கிலம் நீடிப்பது அடிமைத்தனத்தின் சின்னமில்லை, முரண்பாடுகள் நிறைந்த இந்தியா என்னும் நாட்டை ஒன்றுபடுத்தியது ஆங்கிலமே!

எனவே, இன்றைய தினம் மத்திய அரசின் கூடுதல் ஆட்சி மொழியாக நீடிக்கும் ஆங்கிலத்தைத் தரக்குறைவாகவோ, நீக்கவோ, செய்யப்படும் முயற்சிகள் எதுவும், நாட்டின் ஒற்றுமைக்கு ஆபத்தாகவே முடியும்.

தொலைக்காட்சியில் தமிழ்க்காட்சியின் நேரத்தைக் குறைத்தல், அதில் கூடுதலாக இந்தி நிகழ்ச்சிகளை நடத்துதல் உள்ளிட்ட பல்வேறுவழிகளில் தமிழ்நாட்டின்மீது இந்தியைத் திணிக்க முனைவது துரதிர்ஷ்டமானதாகும்.

இந்திய விடுதலைப் போராட்ட வீரர்களின் தியாகத்திற்கு, மொழிப் போராட்ட வீரர்கள் தியாகம் சற்றும் குறைந்ததல்ல. விடுதலை வீரர்களுக்கு உதவித்தொகை அள்ளி, அள்ளி வழங்கும் தமிழக அரசு, இந்தி எதிர்ப்பு தியாகிகளுக்கு நிறுத்தி வைக்கப் பட்ட உதவித் தொகையினை வழங்க முன்வராதது புரியாத புதிராகவே உள்ளது.

15-4-85 அன்று பாராளுமன்றத்தில் செய்தி ஒலிபரப்பு இணை அமைச்சர் வி. காட்கில் சென்னைத் தொலைக்காட்சி நிலையத்தில், இரண்டாவது ஒளிபரப்பு அலைவரிசை நிறுவப் போவதாகவும், அத்திட்டம் இவ்வாண்டு இறுதிக்குள் செயல் படுத்தப்போவதாகவும் அறிவித்துள்ளார்கள். இவ்வறிவிப்பின் மூலம் தொலைக்காட்சியில் இந்தித் திணிப்பு வலுப்பெறுமே அல்லாது, சற்றும் குறைந்திடாது. மேலும் தேசிய கல்விக் கொள்கை என்னும் தந்திரத்தின் மூலம் ஒவ்வொரு மாவட்டங் களிலும் மத்திய பள்ளியை நிறுவ மத்திய அரசு முடிவு செய்

துள்ளது. இம்முறை மூலம் தமிழகத்தில் இந்தி நுழைந்திட பெரும் வாய்ப்பு ஏற்பட்டுவிடும். இதனால் மொழிவுணர்வினை நிலைநாட்டவேண்டிய கட்டாயத்துக்குத் தள்ளப்படுகிறோம். தமிழ் அறிஞர்கள் இது தொடர்பாகத் தீவிரச் செயற்பாட்டில் இறங்கிடவேண்டும் என்பதே எனது பணிவான வேண்டு கோளாகும்.

''தமிழ்மக்கள் எதையும் இழந்துவிட சம்மதிப்பார்கள். அரசுகளையும், அரண்மனைகளையும் கூட இழந்துவிடச் சம்மதிப்பார்கள். ஆனால், அருந்தமிழை இழக்க ஒருபோதும் சம்மதிக்கமாட்டார்கள்'' என்னும் பேரறிஞர் அண்ணாவின் வரலாற்று வரிகள் இளைய தலைமுறையினருக்குப் பாட மாகட்டும்.

இச்சுறு நூல் எனது முதல் முயற்சியாகும். எனது குறை களைப் பெரிதுபடுத்தாமல், நிறைகளைப் போற்றிப் புகழ்ந்து அணிந்துரை வழங்கிய பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை அவர்களுக்கும், ஆய்வறிஞர் டாக்டர், ந. சஞ்சீவி அவர்களுக் கும், பேராசிரியர் செ. கந்தப்பன் அவர்களுக்கும், முகவுரை நல்கிய கவிஞர் முத்துலிங்கம், எம். எல். சி அவர்களுக்கும், பேராசிரியர் தி. சு. கிள்ளிவளவன் அவர்களுக்கும் என் பணிவான வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். வாழ்த்துரை வழங்கியசட்ட மேலவை உறுப்பினர் மிசா. ஆர். கணேசன் அவர்களுக்கும் நன்றி உரித்தாகுக.

இந்நூல் வெளிவர ஆர்வத்தை ஊட்டிய கவிஞர் இரா. அகவழகன் அவர்களுக்கும். இந்நூலின் அச்சுப் படியைத் திருத்தி உதவிய புலவர் வெற்றியழகன் அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக. மேலும் பல அறிவுரைகளை வழங்கிய தமிழ்நாடு தமிழாசிரியர் பேரவைத் தலைவர் புலவர் வே. புகழேந்தி அவர்களுக்கும், ஞான ஆசான் புலவர் த. பெரியாண்டவன் அவர்களுக்கும் நான் என்றென்றும் நன்றிக் கடப்பாடுடையேன்.

அன்புள்ள

த. அழகரசன்

# இந்தி எதிர்ப்பு வரலாறு

தமிழ் நாட்டில் இந்தியைப் பரப்புவதற்குப் பல அரசு நிறுவனங்கள் முடுக்கிவிடப்பட்டுள்ளன. இதைத் தவிர, தனியார் நிறுவனங்களுக்கும் இந்தியைப் பரப்புவதற்காகத் தாராளமாக மானியம் வழங்கப்பட்டுவருகிறது.

மாநில மொழிக்கு ஒரு கோடி ரூபாய் மானியம் கொடுக்கின்ற மத்திய அரசு, இந்தியை மக்கள் ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்ளாத நிலையில் இந்தி மொழி வளர்ச்சிக்கு ஆண்டுக்கு 100 கோடி ரூபாய் செலவு செய்துவருகிறது,

நாட்டில் 35 விழுக்காட்டினர் பேசுகின்ற இந்தி மொழி வளர்ச்சிக்கு 100 கோடி ரூபாய் செலவு செய்வதோடு, 65 விழுக்காட்டு மக்களின் உணர்வுகளைச் சாகடிக்க, இந்திய அரசு தனது அதிகார பலம் அனைத்தையும் முடுக்கிவிட்டுச் செயல்பட்டுவருகிறது.

1979-ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 30-ம் நாள் சென்னைக் கடற்கரையில் நடைபெற்ற பேரறிஞர் அண்ணா பிறந்த நாள் விழாவில் மறைந்த பாரதப் பிரதமர் இந்திரா அம்மையார் கொடுத்த வாக்குறுதி இன்று வினாக் குறியாகி விட்டது.

இந்தி மொழிக்கு முக்கியத்துவம் தரச்சொல்லி இந்திய அரசு ஸ்டேட் பாங் ஆப் இந்தியாவுக்கு அண்மையில் (1985) சுற்றறிக்கை ஒன்றையும் அனுப்பியுள்ளது மக்களை ஏமாற்ற. அரசியல் சாசனத்தில் எட்டாவது அட்டவணையில் இடம் பெற்ற 14 மொழிகளோடு இன்று நேபாள மொழியும் சேர்க்கப் பட்டுள்ளது.

இந்நிலையில் மீண்டும் தமிழக மக்களின் உணர்வுகளை உரசிப் பார்த்தே தீருவது என்று கங்கணம் கட்டிக்கொண்டு காரியத்தில் இறங்கியுள்ளனர்.

இந்தி மொழித் திணிப்பைத் தமிழ் மக்கள் மட்டும்தான் எதிர்க்கிறார்கள் என்கிறார்கள். இந்திமொழித் திணிப்பு எதிர்ப்பு உணர்வானது இந்தியநாடு முழுதும் பரந்து காணப் படுகிறது.

1984-ம் ஆண்டு மேற்குவங்க அரசின் சார்பாக 'A memorandam on Centre State Relation' என்கின்ற ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளனர். அவ்வறிக்கையில் 'எல்லா மொழிகளும் இந்தியாவின் ஆட்சி மொழிகளாக வேண்டும். அந்த அட்டவணையில் நேபாள மொழியும் சேர்க்கப்பட வேண்டும் என்ற கருத்தைக் கூறியுள்ளனர்.

வங்காளம் இந்தி மொழியை எதிர்க்கவில்லை. ஆனால், இந்தி ஏகாதிபத்தியத்தை எதிர்க்கிறது. தங்கள் மீது இந்தி திணிக்கப்படுகிறது என்று இந்தி பேசாத மக்கள் பயப்படு கிறார்கள். அந்தப் பயம் உண்மையின் அடிப்படையில்தான் ஏற்படுகிறது.

**பி. பி. தாஸ்குப்தா**
முன்னாள் எம். பி. (வங். சுயே)

டெல்லியில் உள்ள தலைவர்கள் சிலர் நம் மீது இந்தி யைத் திணிக்க முயன்றுவருகிறார்கள். மொழிப் பிரச்சனையை மக்கள் தீர்ப்புக்கு விட்டுவிட வேண்டும். இந்தி ஒரு குறிப் பிட்ட மொழியாக இல்லை. பல்வேறு விதங்களிலும் முறை களிலும் வழங்கப்பட்டு வருகிறது. இந்தி புகுத்தப்பட்டால் பல்வேறு வகையான பிரச்சனைகளும் எழும்.

**கே. அனுமந்தையா**
மைசூர்—முன்னாள் முதலமைச்சர்
3—3—58.

இந்தித் திணிப்பினால் மிகுதியாகப் பாதிக்கப்படுகின்ற மக்கள் நாம்தாம். உதை பந்துபோல் இங்குமங்குமாக நம் முடைய நிலை எடுத்தெறியப்படுகிறது. எனவே, காரியம் மிஞ்சுமுன் நாம் இதில் அக்கறை காட்ட வேண்டும். தேசிய மொழி என்று ஒன்று இருக்குமாயின், அது எங்கும் பேசப்படும் மொழியாக இருக்கவேண்டும், இல்லையேல், அது திணிக்கப் படுகின்ற மொழி என்பதிலே ஐயமில்லை. இந்தியைத் திணிப்பதிலே அவர்கள் உறுதிகொண்டு வெற்றி பெற்று விடுவார்களாயின், எவ்வளவோ இடையூறுகளும் இன்னல் களும் நேரும். வெறும் கண்துடைப்பு வார்த்தைகளால் நம்மை ஏமாற்றக் கூடாது. நாம் விழிப்பாக இருந்து வேக மாகச் செயல்பட்டுத் தடுக்க வேண்டும். நாம் அனைவரும் இணைந்து நின்று இந்தித் திணிப்பை எதிர்ப்போம்.

இராசாசி

23—10—57.

# அண்ணா அழைக்கிறார் !

1960 ஆகஸ்ட் 31-ம் நாளுக்குள் தமது உத்தரவை குடியரசுத் தலைவர் திரும்பப் பெறாவிட்டால் நமது இறுதிப் போராட்டத்தைத் தொடங்கவேண்டியிருக்கும். அந்த அறப் போராட்டத்தில் ஈடுபட்டு, வரலாற்றில் இடம் பெற குடும்பம் குடும்பமாக எல்லாரும் வாருங்கள்.

அதற்குள்ளாக உங்களிலே எத்தனைப்பேர் அந்தத் தியாகப் பணியில் ஈடுபடப் போகிறீர்கள் என்ற பட்டியலைத் தயாரியுங்கள். பட்டியல் நீளட்டும்! படை பெருகட்டும்!

இடையிலே நீங்கள் பேசவேண்டிய பேச்சுகளை எல்லாம் பேசி மகிழுங்கள்! செய்யவேண்டிய கடமைகளை எல்லாம் செய்து முடித்துத் தயாராயிருங்கள். தாயகம் அழைக்கிறது.

குடும்பம் குடும்பமாக வாருங்கள் — அண்ணனோடு தம்பியும்—சுற்றமோடு நண்பரும் கூடி வாருங்கள், போராட்டக் களத்துக்கு! உங்களோடு வரமுடியாத அளவுக்குத் தள்ளாத வயதுடைய பாட்டியும் கூட, உங்களைத் தேடி வரவேண்டும். களத்துக்கு: தண்டூன்றித் தள்ளாடியாவது உங்கள் பாட்டன் மாரும் பாடிவீடு நோக்கிவருகின்ற தன்மையிலே தாயகம் மீட்க அனைவரும் வாரீர்! வாரீர்!!

இது போன்று எண்ணற்ற சான்றோர்களின் சான்று களைக் காண முடிகிறது. அண்மையில் வட இந்தியர்களின் இந்தி வெறித்தனத்தால், ஆசிய விளையாட்டுப் போட்டியில் கலந்துகொள்ள வந்திருந்த ஈரான் நாடு, விளையாட்டைப் புறக்கணித்துவிட்டு விலகக் கூடிய ஒரு சூழ்நிலைகூட உருவாகியது.

இந்தித் திணிப்பானது காலந்தோறும் பல்வேறு வடிவங் களில், நிலை நாட்டப்பட்டுவருகிறது. இந்தித் திணிப்பு வரலாற்றுத் தியாகப் பாதையினைக் காண்போம்.

## விடுலைக்கு முன்பு இந்தித் திணிப்பு

தந்தை பெரியார் காங்கிரசுக் கட்சியில் இருந்தபோது 1922-ல் இந்திப் பள்ளியை நிறுவினார். காங்கிரசுக் கட்சியில் இருந்த ஆதிக்க சக்திகள், சமற்கிருதத்தையும், ஆரிய நாக ரிகத்தையும், நிலைநாட்ட இந்தி மொழியைக் கருவியாகக் கையாளுகின்றனர் என்பதைப் பெரியார் உணர்ந்தார். இதனால் 1926-ம் ஆண்டு முதல் இந்தி மொழியைப் பெரியார் வன்மையாக எதிர்த்தார்.

தமிழ் மக்களின் சமுதாய, பண்பாட்டு மேம்பாட்டுக்கு வித்திட்ட இயக்கமான நீதிக் கட்சி 1937-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் படுதோல்வி கண்டது. காங்கிரசுக் கட்சி

வெற்றிவாகை சூடியது. இராசாசி தலைமை அமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் அமைச்சரவையில் கல்வி அமைச்சராக இருந்த, டாக்டர் பி. சுப்பராயன் 21-4-1938-ல் தமிழ் நாட்டுப் பள்ளிகளில் இந்தியைக் கட்டாய பாடமாக்கி ஆணை பிறப்பித்தார். இக் கட்டாய உத்தரவினால் தமிழ் நாட்டில் 60 பள்ளிகள், ஆந்திரத்தில் 54 பள்ளிகள், கன்னடத் தில் 4 பள்ளிகள், கேரளத்தில் 7 பள்ளிகள் ஆக மொத்தம் 125 பள்ளிகளில் இந்தி கட்டாய பாடமாக்கப்பட்டது. இந்திப் பாடத் தில் வெற்றி பெற்றால்தான் மேல்வகுப்புக்கு மாற்றப்படுவார் கள் என்ற நடை முறையும், சட்டத்தின் மூலம் கொண்டுவரப் பட்டது. இந்தித் திணிப்பை எதிர்த்து ஈழத்து சிவானந்த அடிகள் முதல் தந்தி அனுப்பினார்.

## முதல் இந்தி எதிர்ப்பு மாநாடு

27—2—1938-ல் காஞ்சிபுரத்தில் முதல் இந்தி எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது. மாநாட்டுக்கு அப்போது சட்ட மன்ற உறுப்பினராக இருந்த கான் பகதூர் கலிபுல்லாசாகிபு தலைமை தாங்கினார். நாவலர் சோமசுந்தர பாரதியார், பேரறிஞர் அண்ணா, பாவேந்தர் பாரதிதாசன், உமாமகேசு வரம்பிள்ளை, சிதம்பரம் என். தண்டபாணி ஆகியோர் மாநாட்டில் கலந்துகொண்டு சிறப்புரை ஆற்றினர்.

## முதலமைச்சர் வீட்டு முன்பு மறியல் போர்

கட்டாய இந்தியை எதிர்க்கும் வகையில் 1938-ம் ஆண்டு சனவரி திங்கள் 3-ம் நாள் தமிழ் நாட்டுப் பள்ளிகளின் முன் மறியல் போர் நடைபெற்றது. சென்னையில் முதலமைச்சர் வீட்டு முன்பும், இந்து தியாலாஜிகல் பள்ளி முன்பும் இந்தியை எதிர்க்கப் புற்றீசல் போல் மக்கள் திரண்டு வந்தனர். இந்தி எதிர்ப்புக்காகக் கைதாகிச் சிறை சென்றவர்களின் எண்ணிக்கை 1271. அவர்களுள் ஆண்கள் 1166 பேர். பெண்கள் 73 பேர். இவர்களோடு சென்ற குழந்தைகளின் எண்ணிக்கை 32.

இந்த முப்பத்திரண்டு குழந்தைகளுள் ஒருவர்தாம் பாராளுமன்ற உறுப்பினர் என்.வி.என். சோமு அவர்கள்.

## தமிழர் பெரும்படை புறப்படுதல்

1-8-1938-ல் நகர தூதன் ஆசிரியர் மணவை திருமலைச் சாமியால் அமைக்கப்பட்ட இந்தி எதிர்ப்புப் படை திருச்சியி லிருந்து சென்னை நோக்கிக் கால்நடைப் பயணம் மேற் கொண்டது. வரலாற்றுச் சிறப்புமிக்க அந்த இந்தி எதிர்ப்புப் படைக்கு இராவ் சாகிபு குமாரசாமி தலைமை தாங்கினார். பாவலர் பாலசுந்தரம், பட்டுக்கோட்டை அழகிரி, திருப்பூர் மொய்தீன், மூதாட்டி இராமாமிர்தம்மாள் போன்ற சான்றோர்கள் பலர், இந்தி எதிர்ப்புப் படையில் கலந்து கொண்டு வீர முழக்கமிட்டனர். இப்பெரும்படை 42 நாள்களில் 577 கற்கள் கடந்து 11-9-1938ல் சென்னை வந்தடைந்தது.

காந்தியடிகளின் தண்டியாத்திரையும், இராசாசியின் வேதாரண்யம் உப்பளப்படையும், இத்தமிழர் பெரும்படையில் நாலில் ஒருபங்கு கூட அமையவில்லை என்பது ஈண்டு நினைவில் கொள்ள வேண்டியது.

## இந்தி எதிர்ப்புத் தீ பரவுதல்

கட்டாய இந்தியை எதிர்த்துச் சாகும்வரை, உண்ணா விரத மிருந்த பல்லாடம் பொன்னுசாமியை அரசு கைது செய்து சிறைச்சாலையில் அடைத்தது. இந்தியை எதிர்த்து ஸ்டாலின் ஜெகதீசன் உண்ணாவிரதம் மேற்கொள்ளப் போவதாக அறிவிப்பு செய்தார்.

1939-ம் ஆண்டு சனவரி திங்களில் இந்தியை எதிர்த்துச் சிறை சென்ற தாளமுத்து, நடராஜன் ஆகிய இருவரும் சிறையிலேயே மாண்டுபோனார்கள். மேற் குறிப்பிட்ட இருவரின் மரணச் செய்தி தமிழகமெங்கும் காட்டுத்தீ போல்

பரவியது. மக்களை அமைதிப்படுத்த அரசு எடுத்துக் கொண்ட முயற்சிகள் அனைத்தும் பயனற்றுப்போயின.

## தந்தை பெரியாரின் வீர முழக்கம்

சென்னை வந்தடைந்த இந்தி எதிர்ப்புப் படையினர் 10-9-1938ல், திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஒரு பொதுக் கூட்டம் நடத்தினர். கடற்கரையில் அலைகடலுக்குப் போட்டி யாக மக்கள் வெள்ளம் தத்தளித்தது. அப்போது கூட்டத்தில்— தந்தை பெரியார் ‘தமிழ்நாடு தமிழருக்கே’ என்ற வீர முழக் கத்தை முதன் முதலாக முழங்கினார். இந்தியத்துணைக் கண்டத்தில் தனிநாடு கேட்டார் தந்தை பெரியார் என்பதை வரலாற்றுப்பூர்வமாக எவரும் மறுத்துவிட முடியாது. தனி நாடு கோரிக்கை பின்னாளில் நீதிக்கட்சி, திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் இவற்றின் கொள்கையாக நிலைத்துவிட்டது.

## இந்தி எதிர்ப்பு வாரியம் (The Anti Hindi Command)

இந்தியை எப்படியும் தமிழ்நாட்டை விட்டு விரட்டிவிட வேண்டுமென்று தமிழ்ப் புலவர்கள் போர்ப் பரணி பாடினர். தன்மான இயக்கத்தில் ஆர்வம் கொண்ட அனைவரும் ஒன்று கூடி சென்னை மாநில இந்தி எதிர்ப்பு வாரியத்தை அமைத் தனர். அவ்வாரியத்தின் தலைவராக சோமசுந்தரபாரதியை யும், செயலாளராக கி. ஆ. பெ. விசுவநாதத்தையும் தேர்ந் தெடுத்தனர்.

28-5-1938 முதல் 1939 முடிய சோமசுந்தரபாரதியார் அவர்கள், சென்னை மாநில இந்தி எதிர்ப்பு வாரியத் தலைவராக இருந்தார்.

## பெரியார் சிறை செல்லல்

இந்தித் திணிப்பு எதிர்ப்புக் கிளர்ச்சியின் காரணமாக, 1938-ம் ஆண்டு திசம்பர் திங்கள் 6-ம் நாள், சென்னை

மாகாண அரசு பெரியாரைக் கைது செய்து பெல்லாரிச் சிறையில் அடைத்தது. சிறைச் சாலையில் பெரியார் வயிற்று வலியால் துன்புற்றார். 1939-ம் ஆண்டு மே திங்கள் 22-ம் நாள், சென்னை மாகாண அரசு எந்தவித முன்னறிவிப்பும் இன்றி விடுதலை செய்தது.

## மகளிர் மாநாடு

1939-ம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் பெண்கள் மாநாடு, திருமதி தருமாம்பாள் தலைமையில் நடைபெற்றது. இந்தியை எதிர்த்துத் தாய்மார்கள் போர் முரசு கொட்டினர். தமிழகத்தின் மூலை முடுக்குகளில் எல்லாம் இந்தி எதிர்ப்புக் குரல் ஒலித்தது. இந்தி எதிர்ப்புப் போரினைச் சமாளிக்க முடியாமல் அரசு திணறியது.

21-2-1940-ல் கட்டாய இந்தியை ரத்து செய்து அரசு ஆணை பிறப்பித்தது.

## இந்தியை எதிர்த்துத் தாய்க்குலம் சிறை செல்லல்

1942-ஆம் ஆண்டு மொழிப் போர் மீண்டும் தமிழகத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. எல்லாப் பள்ளிகளிலும் இந்தி கட்டாய பாடமாகக் கொண்டுவரப்பட்டது. கட்டாய இந்தியை எதிர்த்து தந்தை பெரியார் கிளர்ச்சி செய்தார். இக்கால கட்டத்தில் இந்தி எதிர்ப்புப் போரின் தளகர்த்தராக அறிஞர் அண்ணா களத்தில் நின்றார்.

1942-ம் ஆண்டு இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில், அருணகிரி நாதர்—தன் அருமை மனைவி உண்ணாமலையம்மையைக் கைக் குழந்தையுடன் கிளர்ச்சியில் ஈடுபடச் செய்தார். அவ்வம்மையாருடன் மயிலை சிவமுத்து அவர்களின் தமக்கையார் மலர்முகத்தம்மையார், டாக்டர் சிற்சபை அவர்களின் துணைவியார் சரசுவதி அம்மையார், முன்னாள் அமைச்சர் என். வி. நடராசன் அவர்களின் துணைவியார் புவனேசுவரி அம்மையார்,

வல்லை பாலசுப்பிரமணியம் அவர்களின் துணைவியார் தாமரைக் கண்ணியம்மையார், மற்றும் சிலருமாக ஒன்பது மகளிர் சிறை சென்றனர். நாற்பத்து இரண்டு நாள்கள் தண்டனை பெற்று வேலூர் சிறையில் இருந்தனர்.

இந்தி கட்டாய பாடமில்லை என அறிவிக்கப்பட்டது. இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியும் நிறுத்தப்பட்டது.

## இரண்டாவது கட்ட இந்தி எதிர்ப்புப் போர்

1946-ல் சென்னை மாநில முதல்வராக, டி. பிரகாசம் பொறுப்பேற்றார். கல்வி அமைச்சராக தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அரியணை எறினார். அவர் தம் ஆணைப்படி அனைத்துப் பள்ளிகளிலும் இந்தி கட்டாய பாடமாக்கப்பட்டது. தந்தை பெரியார் இந்தியை முழுமூச்சாக எதிர்த்தார். இந்தி எதிர்ப்புப் போருக்கு அண்ணா தளகர்த்தராகவும், டி. எம். பார்த்தசாரதி அமைப்பாளராகவும் இருந்து செயல்பட்டனர்.

சிறைச்சாலைகள் நிரம்பின. இந்தி எதிர்ப்பைச் சமாளிக்க முடியாத காங்கிரசு அரசு கட்டாய இந்தித் திணிப்பைக் கை விட்டது.

## விடுதலைக்குப்பின் - இந்தித் திணிப்பு

1947-ம் ஆண்டு நாடு சுதந்திரம் அடைந்தது. விடுதலைக் குப் பின்னர் இந்தியை ஆட்சி மொழியாக்க வேண்டுமென்பது காங்கிரசுக் கட்சியின் தலையாய கொள்கையாக இருந்துவரு கிறது.

தமிழகத்தில் மீண்டும் இந்தி கட்டாய பாடமாக்கப்பட்டது. 17-7-1948-ல் தந்தை பெரியார் சென்னையில், இந்தி எதிர்ப்பு மாநாட்டைக் கூட்டினார். மாநாட்டுக்கு மறைமலை அடிகளார் தலைமை தாங்கினார். தமிழ்த் தென்றல் திரு. வி. க. மாநாட்டைத் தொடங்கி வைத்தார். பேரறிஞர் அண்ணா

ம. பொ. சிவஞானம், நாரணதுரைக்கண்ணனார் போன்ற சான்றோர்கள் இந்தியை எதிர்த்து வீரமுழக்கம் செய்தனர்.

1-8-1948-ல் பேராசிரியர் இலக்குவனார் தலைமையில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடந்தது. மாநாட்டில் அரசுக்கு இறுதி எச்சரிக்கை விடப்பட்டது, 15-9-1948-ல் திராவிடர் கழகத் தொண்டர்கள் பெரியாரின் கட்டளைப்படி, பள்ளிகளின் முன்னர் மறியலும், ஊர்வலமும் நடத்தினர்.

## இந்தி எதிர்ப்புத் தளகர்த்தர் அண்ணா

2-8-1948-ல் கூடிய இந்றி எதிர்ப்புக் கூட்டத்தில் பேரறிஞர் அண்ணா, இந்தி :எதிர்ப்புப் படைத் தளகர்த்தராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

15-9-1948-ல் இந்தி எதிர்ப்பு மறியல் போர் தொடங்கியது. உலகெங்கும் கண்டிராத அளவுக்கு அடக்குமுறை, தடியடித் தர்பார் நடைபெற்றது. பல்லாயிரக்கணக்கானவர்கள் கைது செய்து சிறையில் அடைக்கப்பட்டனர். போராட்டத்துக்கு அரசு பணிந்து கொடுக்கவில்லை.

## உயர்நிலைப் பள்ளிகளில் இந்தி கட்டாய பாடம்

2-5-1950-ல் தமிழகக் கல்வி அமைச்சராக இருந்த திரு. மாதவமேனன், உயர்நிலைப் பள்ளிகளில் இந்தியைக் கட்டாய பாடமாக்கி ஆணை பிறப்பித்தார். தமிழக மக்கள் இந்தியை எதிர்த்து—எட்டுதிக்கும் போர் முரசு கொட்டினர். தமிழக மக்களின் எதிர்ப்பைத் தாக்குப் பிடிக்க முடியாத அரசு, தம் திணிப்பு வேலையை நிறுத்துவதென்று முடிவு செய்தது.

18-7-1950-ல் கல்வி அமைச்சர் திரு. மாதவமேனன், இந்தி கட்டாய பாடமில்லை விருப்பப் பாடமே என்று ஆணை பிறப் பித்தார்.

## இந்தி அழிப்புப் போர்

தமிழ் நாட்டிலுள்ள மத்திய அரசு நிறுவனங்களின் பெயர்ப் பலகைகள் அனைத்தும் இந்தி மொழியிலே காட்சி அளித்தன. இது இந்தி நாடா? அல்லது தமிழ் நாடா? என்று ஐயப்பட வேண்டிய அளவுக்குக் கேவலமாகக் காட்சியளித்தது.

1-8-1952-ல் திருச்சிராப்பள்ளிச் சந்திப்பில் பெரியார் இந்தி எழுத்துகளைத் தார் கொண்டு அழித்தார். திராவிடர் கழகத் தினர் பெரும் அளவில், இந்தி அழிப்புப் போரில் பங்கேற்றனர்.

அண்ணா, கோவை தொடர்வண்டிச் சந்திப்பில் இந்தி எழுத்துகளைத் தார் பூசி அழித்தார். அண்ணாவின் அன்புக் கட்டளையினைத் தலைமேற்கொண்டு, தொண்டர்கள் முனைப் புடன் செயல்பட்டனர். கே. ஏ. மதியழகன் உட்பட சுமார் முப்பது பேர்மீது அரசு வழக்கு தொடர்ந்தது.

## இந்தி அழிப்புப் போரில் தாய்க் குலத்தின் பங்கு

இந்திப் பெயர்ப்பலகை அழிப்புப் போராட்டத்தில் இராமாமிர்தத்தம்மையார், அலுமேலு அப்பாதுரையார், பூங்கோதை, அருண்மொழி முதலிய வீராங்கனைகள் பங்கு கொண்டு செயல்பட்ட திறன் போற்றத்தக்கது.

## இந்திப் பெயர்ப்பலகை அழிப்புப் போராட்டத்தில் ம. பொ. சிவஞானத்தின் பங்கு

திராவிட உணர்வின் மகுடமாக விளங்கும், திராவிடக் கழகமும், திராவிட முன்னேற்றக் கழகமும், இந்தி எழுத்து களைத் தார் பூசி அழித்தன. இந்தி எழுத்துகள்மீது பூசிய தாரை நீக்க, மண்ணெண்ணெய் ஊற்றித் துடைக்குமாறு, தம் தமிழரசுக் கழகத் தொண்டர்களுக்கு; சிலம்புச் செல்வர் கட்டளை பிறப்பித்தார்.

## இந்தி எதிர்ப்பு நாள்

இந்தி ஏகாதிபத்தியம் ஆங்கிலம் இருந்த இடத்தில் இந்தியை அமர வைக்க வேண்டுமென்று துடியாய்த் துடித்தது, இந்தித் திணிப்பு தீவிரம் ஆக்கப்படுவது கண்டு தமிழ் மக்கள் கொதிப்படைந்தனர். திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் கண்டன அறிக்கை விடப்பட்டது. 13-10-1957-ல் நாடெங்கிலும் இந்தி எதிர்ப்பு நாள் கொண்டாடப்பட்டது.

## வானொலி ஆகாஷ்வாணி ஆதல்

1959-ம் ஆண்டு இந்தியைத் திணிப்பதில் இந்திய அரசு மீண்டும் ஒரு புது முயற்சியை மேற்கொண்டது. பழக்கத்தில் 'வானொலி' என்று சொல்லப்படுவதை 'ஆகாஷ்வாணி' என்று மாற்றி நடைமுறைப்படுத்தப்பட்டது. இச்செயலைத் தமிழ் நாட்டு மக்கள் கடுமையாக எதிர்த்தனர். பாடகர்கள், எழுத்தாளர்கள், பேச்சாளர்கள் வானொலி நிகழ்ச்சியில் கலந்து கொள்வதில்லை என முடிவு செய்தனர். இறுதியில் இந்தி ஏகாதிபத்தியம் அடிபணிந்தது. ஆகாஷ்வாணி என்ற சொல் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டது.

1982-ம் ஆண்டு ஜூன் திங்கள் 'ஆகாஷ்வாணி' என்ற சொல்லை வழக்கத்தில் கொண்டுவர அரசு முயற்சி செய்தது. தமிழக மக்களின் எதிர்ப்பின் காரணமாக மீண்டும் 'ஆகாஷ்வாணி' என்ற சொல் திரும்பப் பெற்றுக்கொள்ளப் பட்டது.

## குடியரசுத் தலைவரின் அறிவிப்பு

1959-ல் இந்தி மொழியை ஆட்சி மொழி ஆக்கவேண்டிய ஏற்பாடுகளைத் துரிதப்படுத்துமாறு, குடியரசுத் தலைவர் அறிவிப்பு செய்தார். குடியரசுத் தலைவரின் அறிவிப்பைத் திரும்பப்பெற வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, 30-8-1960 அன்று திராவிட முன்னேற்றக் கழகம் ஓர் அறிவிப்பை வெளி யிட்டது.

### போராட்டக் குழுத்தலைவர் ஈ. வெ. கி. சம்பத்

நாடெங்கணும் இந்தி எதிர்ப்புப் போர் முரசு கொட்டப் பட்டது. இந்தியை எதிர்க்க அலை கடலென மக்கள் ஆர்த் தெழுந்தனர். இந்தி எதிர்ப்புப் போராட்டக் குழுத் தலைவ ராக, ஈ. வெ. கி. சம்பத் தேர்ந்தெடுக்கப்பட்டார். போராட்டக் குழுவில், கலைஞர் மு. கருணாநிதி, பேராசிரியர் க. அன்பழகன், கே. ஏ. மதியழகன் போன்றவர்கள் இடம் பெற்றிருந்தனர்.

1-8-1960-ல் சென்னை கோடம்பாக்கத்தில், இந்தி எதிர்ப்புப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்துக்கு அண்ணா தலைமை தாங்கினார். அக் கூட்டத்தில் இந்தித் திணிப்பை அண்ணா வன்மையாகக் கண்டித்தார். நாடு முழுதும் போராட்டங்களும், பொதுக்கூட்டங்களும் நடை பெற்றன.

### போராட்டக் குழுத் தலைவருக்கு நேரு எழுதிய கடிதம்

3-8-1960-ல் நேரு பெருமான் அவர்கள், இந்தி எதிர்ப்புப் போராட்டக்குழுத் தலைவர் ஈ.வெ.கி. சம்பத் அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

இந்தி பேசாத மக்கள் கருத்தை அறியாமல், இந்தியைத் திணிக்கமாட்டேன். ஆட்சி மொழியாக இருக்கின்ற ஆங்கிலம் மக்கள் விரும்பும் காலம்வரை கண்டிப்பாக நீடிக்கும். மக்கள் சபையில், தான் மக்களுக்கு அளித்த வாக்குறுதிக்குப் புறம்பாக அரசாங்கம் எந்தக் காரியத்தையும் செய்ய வாய்ப்பில்லை என்பதே அக்கடிதமாகும்.

### மாநிலங்களவையில் அண்ணாவின் குரல்

1963-ம் ஆண்டு மாநிலங்களவையில் அண்ணா ஆற்றிய உரை, இந்திய வரலாற்றில் பொன்னெழுத்துகளால் பொறிக்க வேண்டியவையாகும்.

விளைவுகளைக் குறித்து அஞ்சப் போவதில்லை, இந்தித் திணிப்பை எதிர்த்துப் போரிடுவோம். அதிகாரவர்க்கத்திடம் கைகட்டி, வாய் பொத்திக் கிடந்திட என் மனச்சான்று இடம் தராது. பல இன மக்களைக் கொண்ட சமூக அமைப்பில் ஒரு பொது மொழி தேவை என வாதாடுவது, நமது சமுதாயத்தின், சில பகுதி மக்களுக்கு எதிராக, எதிர்பாராத அநீதிகளையும் இக்கட்டுகளையும் ஏற்படுத்தும் என்று அண்ணா அவர்கள் கூறியுள்ளார்கள்.

## அண்ணாவின் போர்ப்பிரகடனம்

25-8-1963-ல் தஞ்சையில் இந்தி எதிர்ப்பு மாநாடு கூடியது. இம்மாநாட்டில் பேசிய அண்ணா! இந்தி எதிர்ப்பு என்பது வெறும் மொழிப் பிரச்சனை மட்டுமல்ல, இந்தித் திணிப்பின் பின்னால் ஒரு நீண்ட வரலாறே இருக்கிறது. இந்தித் திணிப்பின்மூலம் அதிகாரத்தை வைத்து—இந்தி பேசாத மக்கள் மீது எதேச்சதிகாரத்தைத் திணிக்கிறார்கள். மொழி ஆதிக்கத்தைப் புகுத்த நினைக்கும் வன்கணாளர்மீது, போர் தொடுப்பது தமிழ் மக்களின் கடமை என்று அண்ணா போர்ப் பிரகடனம் செய்தார்.

## திருச்சியில் மாணவர் மாநாடு

6-10-1963-ல் திருச்சியில் மாணவர்கள் இந்தி எதிர்ப்பு மாநாடு நடத்தினர். இம்மாநாட்டைச் சிறப்புற நடத்தியவர்கள், கவிஞர் நா. காமராசன், க. காளிமுத்து, பெ. சீனிவாசன் ஆகியோராவர். இந்தி எதிர்ப்புப் போரில் சிறை சென்ற முதல் மாணவர் எனும் சிறப்புக்குரியவர் பேராசிரியர் மா. செல்வராசன் என்பது குறிப்பிடத்தக்கது.

மூதறிஞர் இராசாசி இம்மாநாட்டில் கலந்துகொண்டு, இந்தி வெறியர்களுக்கு எதிரான கருத்துகளை எடுத்து வைத்தார். அறிஞர் அண்ணா, காயிதே மில்லத் முகம்மது இசுமாயில் போன்ற தலைவர்களும் இம்மாட்டில் கலந்து கொண்டு இந்தி மொழிக்கு எதிரான வாதங்களை எடுத்து வைத்தனர்.

## இந்தியை எதிர்த்து அண்ணா சிறை செல்லல்

13—10—1963-ல் சென்னையில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது. அன்று காலை அறிவகத்திலிருந்து மாபெரும் இந்தி எதிர்ப்பு ஊர்வலம் புறப்பட்டது. மாநாட்டில் தலைமை யுரையாற்றிய அண்ணா—அரசியல் சட்டத்தின் 17-வது பிரிவைத் தீயிட்டுக் கொளுத்துமாறு தொண்டர்களுக்கு அன்புக் கட்டளையிட்டார்.

சட்ட எரிப்புப் போரிலும், மறியல் போரிலும் ஈடுபடு கின்ற ஒவ்வொரு அணியும் ஐந்து பேர்களைக் கொண்டதாக இருக்க வேண்டுமென்றும், இவ்வணியினர் ஐவர் அணியினர் என்று அழைக்கப்படுவார்கள் என்றும் அண்ணா அறிவிப்பு செய்தார்.

அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, கே. ஏ. மதியழகன், க. இராசாராம், மதுரை முத்து போன்ற முன்னணித் தலைவர்களும், பல்லாயிரக் கணக்கான தொண்டர் களும் சிறையில் அடைக்கப்பட்டனர். விசாரணைக்குப் பின்னர், அரசு அண்ணாவுக்கு ஆறு மாதம் சிறைத்தண்டனை விதித்தது.

## குடியரசு நாளைத் துக்க நாளாகக் கொண்டாடுதல்

1965 சனவரி 26 குடியரசு நாள் முதல் இந்தியை நாட்டின் ஒரே ஆட்சி மொழியாக ஆக்குவதென்று இந்திய அரசு முடிவு செய்தது. தமிழ் மக்களின் உணர்வினைத் தெரிவிக்கின்ற வகையில் விடுதலை நாளைத் துக்க நாளாகக் கொண்டாடும் படி அண்ணா அன்புக் கட்டளையிட்டார்.

குடியரசு நாளான சனவரி 26-ம் நாள் பொது விடுமுறை நாள். ஆதலால், அதற்கு முந்தைய நாளான சனவரி 25-ம் நாளன்றே 'படிப்பு நிறுத்தம் செய்து' எதிர்ப்பைக் காட்டுவ தென மாணவர்கள் முடிவு செய்தனர். மதுரையில் ஊர்வலம்

சென்றுகொண்டிருந்தபோது மாணவர் ஒருவர் வெட்டப்பட்டார். அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர் இராசேந்திரன் சுட்டுக் கொல்லப்பட்டார். அப்போதைய முதலமைச்சர் பக்தவச்சலம், மாணவர்களின் போராட்டத்தை எள்ளி நகையாடினார். இதனால் நாடெங்கிலும் கொந்தளிப்பு நிலை உருவாயிற்று.

## தீக்குளித்த தியாக மறவர்கள்

உயிர் தமிழுக்கு உடல் மண்ணுக்கு என வீரச் சபதம் ஏற்ற இனவுணர்வு மிக்க இளைஞர்கள் அரசுக்கு அபாய அறிவிப்பு செய்தனர். தியாக மறவர்கள் தங்கள் உடலைத் தீக்கிரையாக்கித் தமிழகத்தை உணர்ச்சிப் பிழம்பாக்கினர்.

## தியாக மறவன் சின்னச்சாமி

இந்தி ஆதிக்கம் தமிழ் மண்ணில் வேரூன்றாமல் தடுக்க தியாகிகளுள் தலையாய இடத்தை வகிப்பவர் திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த கீழப்பழூர் சின்னசாமிதாம். திருமண மான அவருக்கு 'திராவிடச் செல்வி' என்னும் பெயருடன் ஒரு பெண் மகவு இருந்தாள். 20—1—1965 அன்று அதிகாலை, தமது உடலில் பெட்ரோலை, ஊற்றி நெருப்பு வைத்துக் கொண்டார். அவர் நெருப்பில் எரியும்போதும் 'இந்தி ஒழிக! தமிழ் வாழ்க!' என முழக்கமிட்டார்.

## தியாக மறவன் த. மு. சிவலிங்கம்

கோடம்பாக்கம் த. மு. சிவலிங்கம் 21 வயது இளைஞர், தமிழ் உணர்வினால் உந்தப்பட்டவர். 26-1-1965-ல் தனது உடலில் பெட்ரோல் ஊற்றித் தீயை வைத்துக்கொண்டு கருகி மாண்டார். அவ்விளைஞர் எழுதிய கடிதத்தில் 'உயிர் தமிழுக்கு, உடல் மண்ணுக்கு' இந்தி ஆட்சி மொழியாவதைக் கண்டித்துச் சாகிறேன் என்று எழுதிவைத்துள்ளார்.

## தியாகமறவன் ஏ. அரங்கநாதன்

ஏ. அரங்நாதன் விருகம்பாக்கத்தைச் சார்ந்த இளைஞர். 27-1-1965-ல் தனது உடலில் மண்ணெண்ணெய் ஊற்றித் தீவைத்துக் கொண்டு மடிந்தார். அரங்கநாதன் கொள்கைப் பிடிப்பு மிக்கவராகக் காணப்பட்டார். தன் மனைவியையும், மக்களையும்கூடப் பொருட்படுத்தாது, மொழிப் போரில் இன்னுயிர் துறந்த அன்னாரின் தியாகத்தை என்னென்று சொல்வது!

## ஆசிரியர் வீரப்பன், கோவை முத்து

ஆசிரியர் வீரப்பன் திருச்சி மாவட்டம் ஐயம்பாளையத்தைச் சார்ந்தவர். ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டிருந்தாலும். தமிழ் மொழியின்பால் நிலையான பற்றுகொண்டவர்.

கோவை முத்து, கோவை மாவட்டம் சத்தியமங்கலம் என்னும் ஊரில் பிறந்தவர். இவர் ஏழை விவசாயக் குடியைச் சார்ந்தவர். இவ் இருவரின் உணர்வும் இந்தி எதிர்ப்பின் போது தமிழ்மக்களிடம் பெரும் உணர்வை உண்டுபண்ணியது.

## சாரங்கபாணி

சாரங்கபாணி மாயூரம் கல்லூரியில் பயின்ற இருபது வயது மாணவர். இவ்மாணவர் கல்லூரிவளாகத்திலே ஓர் இரவு தீ வைத்துக்கொண்டு தன்னுயிரை, இனிய தமிழ்மொழிக்காக ஈந்தார்.

## கீரனூர் முத்து, விராலிமலை சண்முகம்

கீரனூர் முத்து திருச்சி மாவட்டம் கீரனூரில் பிறந்தவர். இவரும் இந்திமொழியை எதிர்த்துத் தன்னுடலில் தீவைத்துக் கொண்டு இறந்தார்.

விராலி மலையைச் சார்ந்தவர் சண்முகம். இவர் இந்தி மொழியை எதிர்த்து நச்சுமருந்து தின்று உயிர் துறந்தார்.

உலக வரலாற்றில் உயிர்த் தியாகம் செய்தவர்கள், தென் வியட்னாமை சார்ந்த புத்தத் துறவிகள். புத்தபிட்சுகள் சிலர் அங்கு நடைபெற்ற இராணுவ ஆட்சிக் கொடுமையை எதிர்த்து தம்முடம்பை எரியூட்டிக் கொண்டனர்.

உலக வரலாற்றில் மொழியின் புகழ்பாடி, வீரமரணம் அடைந்தவர்கள் தமிழர்கள் என்பது, வரலாற்றுப் புத்தகத்தின் முதல்பக்கத்தில் குறிக்க வேண்டிய செய்தியாகும், ஆனால், அவ்வரலாற்று நாயகர்களின் வரலாற்றுக் குறிப்புகள்கூட, சரிவர கிடைக்காமை தமிழர்கள் செய்த பெரும் குறை. இது மன்னிக்க முடியாத பெரும் குற்றம். இஃது நம்மவர்கள் அவ்வீரத் தியாகிகளுக்குச் செய்த துரோகம் என்றுகூடச் சொல்லலாம்.

## தன்மானத் தமிழர்களுக்கு ரவுடிப் பட்டம்

26-1-1965 அன்று விடுதலை நாள் துக்க நாளாகக் கொண்டாடப்பட்டது. அரசியல் தலைவர்களும், தமிழறிஞர் களும் அடக்கு முறைக்கு ஆளாயினர்.

அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, நாவலர்நெடுஞ் செழியன், பேராசிரியர் அன்பழகன், க. இராசாராம், இரா. செழியன் முதலான தலைவர்களும், பேராசிரியர் இலக்குவனார், பன்மொழிப்புலவர் க. அப்பாதுரை, போன்ற தமிழறிஞர்களும் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்கள் அனைவர் மீதும் ரவுடிக் குற்றம் சாட்டப்பட்டு வழக்கு பதிவு செய்யப் பட்டது.

## மாணவர் ஊர்வலம்

தமிழகத்தில் இந்தி எதிர்ப்பு உணர்வு உச்ச நிலைக்குச் சென்றது. மாணவர்கள் 50, 000 பேர் கோட்டை நோக்கி ஊர்வலமாகச் சென்றனர். இந்தித் திணிப்பைத் தடுத்துநிறுத்து மாறு முதல்வரிடம் முறையிட்டனர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவர்கள் இந்தித் திணிப்பைக் கண்டித்து ஊர்வலம் சென்றனர், மாணவர்களின் அமைதியைக் குலைக்கக் காவல் துறையினர், வலிதின் முயன்று தடியடியும் துப்பாக்கிச் சூடும் நடத்தினர். துப்பாக்கிச் சூட்டில் இராசேந்திரன் என்ற மாணவர் வீரமரணம் அடைந்தார்.

## பாளைச் சிறையில் கலைஞர்

இந்தி எதிர்ப்புக் காலத்தில் கலைஞர் அவர்கள் செய்த ஈடு இணை இல்லாத தொண்டு பொதுமக்களையும் மாணவர்களையும் விழிப்படையச் செய்தது. மாணவர்கள் எழுச்சியுற்றனர். தமிழ்நாட்டின் பலபகுதிகளில் பிணமலைகள் குவிந்தன. எப்பக்கம் நோக்கினும் இந்தி எதிர்ப்பு போர்முரசு கொட்டியது.

தமிழ் நாட்டில் நடைபெறுகின்ற புரட்சிக்குக் கலைஞர் கருணாநிதிதான் காரணம் என்று அரசு குற்றம் சாட்டியது. கலைஞர் 1965-ஆம் ஆண்டு பிப்பிரவரி 16-ஆம் நாள் பாது காப்புச் சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டுப் பாளையங் கோட்டைச் சிறையில் அடைக்கப்பட்டார். இந்தியை எதிர்த்து 63 நாள்கள் தனிமைச் சிறையில் இருந்த வரலாற்று நாயகனின் உணர்வுகளை என்னென்று சொல்லிப் பாராட்டுவது!

## நாவலர் சோம சுந்தர பாரதியாரின் பங்கு

இந்தி எதிர்ப்பு வரலாற்றில் சோமசுந்தரபாரதியாரின் பங்கு தனிச் சிறப்புடையது. தமிழ் மண்ணில் இந்தி எதிர்ப்பு உணர்வை வலுவடையச் செய்த சோமசுந்தர பாரதியாரின் தியாக வரலாற்றைத் தமிழ் உலகம் நன்கறியும். அவர் செய்த பணிகளுக்கெல்லாம் மகுடம் வைத்தது போன்றது 'ஆச்சாரியருக்கு ஒரு சிறந்த மடல்' என்னும் ஆங்கில நூலாகும்.

சோமசுந்தரபாரதியார் அவர்கள் கட்டாய இந்தியை எதிர்ப்பதற்கான காரணங்களைத் தெள்ளத் தெளிவாக விளக்கி, இந்த ஆங்கில நூலைத் தம் சொந்த செலவிலேயே

பத்தாயிரம் படிகள் அச்சிட்டு நாடெங்கும் பரப்ப விரும்பினார். புத்தகம் அச்சிட்டு முடிந்தவுடன் அதன் படிகள் அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்பட்டுவிடக்கூடும் என்ற வதந்தி உலவியது. எனவே அந்நூலை இரண்டே நாள்களில் அச்சிட்டு, ஒரே இரவில் பத்தாயிரம் படிகளையும் பற்பல ஊர்களுக்குக் கட்டஞ்சல் (பார்சல்) மூலம் அனுப்பிவைத்தார்.

## இந்தி எதிர்ப்புப் போரில் காஞ்சி மணிமொழியார் பங்கு

மாணவப் பருவத்திலிருந்தே நீதிக் கட்சியின் வளர்ச்சிக்காக உழைத்தவர் காஞ்சி மணிமொழியார்; இந்தி எதிர்ப்புப் போர் நடைபெற்றபோது, தமிழகத்தில் காணப்பட்ட மாபெரும் விழிப்புணர்ச்சிக்குக் காஞ்சி மணிமொழியார் அடிப்படையாக இருந்தார்.

1938-ல் கருவூரில் 'திராவிடன்' இதழ்ப் பொறுப்பாசிரியராக இருந்த ஈழத்தடிகள் இந்தியை எதிர்த்து முதற்குரல் கொடுத்தார். அன்று சென்னையில் காஞ்சி மணிமொழியார் தலைமையில் இந்தி எதிர்ப்பு ஊர்வலம் சிறப்பாக நடைபெற்றது. அவ்வூர்வலத்தில் சுயமரியாதைச் சுடர் செ. தெ. நாயகம், அருணகிரிநாதர், சண்முகானந்தர் ஆகியோர் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

3-6-1938 அன்று மாலை சென்னைக் கோடம்பாக்கத்தில், தமிழ்க்கடல் மறைமலை அடிகளார் தலைமையில் இந்தி எதிர்ப்பு மாநாடு சிறப்பாக நடந்துகொண்டிருந்தது. தியாகராய நகரில் இராசாசி இல்லம் முன் 'இந்தி ஒழிய வேண்டும். இல்லையேல் நான் ஒழிய வேண்டும்' என்று உண்ணாவிரதமிருந்த பல்லடம் பொன்னுசாமி கைது செய்யப்பட்டார். அச் செய்தி கிடைத்தவுடன் அமர்ந்திருந்தோர் எழுந்து நடக்கலாயினர். மாநாடு ஊர்வலமாகியது. ஊர்வலத்தைக் காஞ்சி மணி மொழியார் தலைமை தாங்கி நடத்திச் சென்றார். இரவு ஒன்பது மணிக்கு இராஜாஜி வீட்டு முன்பு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அப்பொதுக் கூட்டத்தில் செ. தெ. நாயகம்,

சாமி சண்முகானந்தம், மணிமொழியார் ஆகியோர் விரிவுரை யாற்றினர்.

22-8-1948-ல் சென்னை பெரியார் திடலில் திராவிடக்கழக நிருவாகக் குழுக் கூட்டம் நடைபெற்றுக்கொண்டிருந்த போதே தந்தை பெரியார், அறிஞர் அண்ணா, அஞ்சாநெஞ்சன் அழகிரிசாமி, ஈ. வே. கி. சம்பத், என். வி. நடராஜன், டாக்டர் தருமாம்பாள், விடுதலை குருசாமி, காஞ்சிமணி மொழியார் ஆகியோர் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டனர்.

17-7-1948-ல் சென்னை செயிண்ட்மேரி மண்டபத்தில், மறைமலை அடிகளார் தலைமையில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடை பெற்றது. அம் மாநாட்டில் தந்தை பெரியார், அறிஞர், அண்ணா, புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், ம. பொ. சிவஞானம், நாரண துரைக்கண்ணனார். அப்துல்மஜித், ரெவரண்ட் அருள் தங்கையா போன்ற பெருந்தகையாளர்கள் கலந்துகொண் டனர். அம்மா நாட்டுச் செயலாளராக இருந்து காஞ்சிமணி மொழியார் ஆற்றியபணி வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தாகும்.

17-9.1948 அன்று சென்னை டி. டி. வி. பள்ளி முன்பு நடைபெற்ற இந்தி எதிர்ப்பு மறியல் போருக்குக் காஞ்சி மணி மொழியார் தலைமை தாங்கிச் சென்றார். இப்போராட்டத்தில் கலந்துகொண்ட அனைவருக்கும் ஒரு வாரகாலம் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

1952ல் மத்திய அரசாங்க அலுவலகப் பெயர்ப் பலகையில் உள்ள இந்தி எழுத்து அழிப்பு இயக்கம் தொடர்ந்தது. காஞ்சி மணி மொழியார் சென்னை பிராட்வேயில் 'இருந்த போர்வாள்' அலுவலகத்திலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு ஜி. பி. ஓ. அலுவலகம் சென்று அங்கிருந்த இந்திப் பெயர்ப் பலகையில் உள்ள இந்தி எழுத்துகளை அழித்தார்.

## பாவேந்தரின் தொண்டு

பாவேந்தர் பாரதிதாசன் இந்தி எதிர்ப்புப் போராட்டக் காலத்தில் எரிதணலை விழியில் தேக்கி—எழுத்தில் கொதிப்பை ஊற்றித் தமிழ் இளைஞர்களைத் தமிழ் காக்க அழைத்தார்.

தமிழ்ப்புலவர்கள் என்ன செய்கின்றார்
தமிழுக்கின்னல் வரும்போது?
தமிழ்தானே உமை வாழ்விக் கின்றது
சாம்பிண மாகக் கிடப்பதுவா?

தமிழ்எழுத்தாளர் என்ன செய்கின்றார்
தமிழைக் கெடுப்போர் வரும்போது?
தமிழைச் சோற்றுக் கடனாய் வைத்துத்
தன்மானத்தை விற்பதுவா?

தமிழ்மடத்தலைவர் என்ன செய்கின்றார்
தமிழை அழிப்பார் வரும்போது?
தமிழர் கோயிற்குள் வடமொழிச்சியர்
தாளில் வீழ்ந்து மறப்பதுவா?

தமிழ்க்காளைகள் தமிழ்மாணவர்கள்
தமிழின் பகையைக் காணுங்கள்
தமிழ்ப்பகை மாய்த்த வீரர்கள் என்ற
தன்மா னத்தைப் பூணுங்கள்.

என்ற புரட்சிக் கவிஞரின் பாடல்கள் இன்னுமோர் முறை தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் ஒலித்திட வேண்டும். மொழிப் போரில் தியாக வரலாறு படைத்திட வேண்டும்.

## மொழிப் போரில் கி. ஆ. பெ. விசுவநாதத்தின் பங்கு

இந்தி எதிர்ப்புக் காலத்தில் 'திரும்பிப்பார் திருச்சியை' என்ற அண்ணனின், விடுதலைத் தலையங்கம், திருச்சி

மாவட்டத்தின் வரலாற்றை உணர்த்துகிறது. திருச்சி கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் சென்னை மாநில இந்தி எதிர்ப்பு வாரியத்தின் செயலாளராக இருந்து செயல்பட்டது, அன்னாரின் அஞ்சா நெஞ்சத்தைக் காட்டுகிறது.

கி. ஆ. பெ. அவர்களின் சிறப்புகளுள் தலையாய சிறப்பாகக் கருதப்படுவது, இந்தி எதிர்ப்புப் பிரச்சாரத்தின்போது, தமிழ்நாட்டின் 12 மாவட்டங்களிலும் 314 ஊர்களில் 480 நாள்களில் 617 சொற்பொழிவுகளைச் செய்து தமிழ்மக்களை உணர்ச்சிப் பிழம்பாக்கியதே.

## குடந்தை இராசகோபாலனின் தொண்டு

1948-ஆம் ஆண்டு நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் குடந்தை வீரா. இராசகோபாலனின் பங்கு வரலாற்றுச் சிறப்புடையது. 1948-ஆம் ஆண்டில் திரு. இராசகோபாலன் அவர்கள் திராவிட மாணவர் கழகச் செயலாளராகப் பணியாற்றிவந்தார்கள்.

இந்தி எதிர்ப்புப் போரில் அரசு விதித்த தடைகளை மீறிக் கூட்டங்கள் நடத்துவது போராட்டத்தின் முதல் கட்டமாக நடைபெற்றது. போராட்டக் களமாகக் குடந்தை நகரம் தேர்ந்தெடுக்கப்பட்டது. காவல் துறையினர் போராட்டத்தைத் தடுத்து நிறுத்துவதைவிட போராடுபவர்களை அழித்து ஒழிப்பதிலேயே அதிகக் கவனம் செலுத்தினர்.

போராட்ட வீரராக நின்ற இராசகோபாலனைக் காவலர்கள் அடித்தார்கள். தொடர்ந்து அடித்துக்கொண்டே இருந்தார்கள். இராசகோபலன் மயங்கித் துவண்டார்—கீழே விழுந்தார் மூர்ச்சையானார்—உயிர் போய்விட்டது என்ற நம்பிக்கை ஏற்படும் வரை காவல்துறையினர் அடிப்பதை நிறுத்தவில்லை. அந்த உடல் தெரு ஓரத்தில் தூக்கிப் போடப்பட்டது. அன்னைத் தமிழ் அவரைக் கைவிடவில்லை. எப்படியோ பிழைத்துக்கொண்டார்.

## ஆட்சிமொழித் திருத்தச் சட்டம்

1967-ல் நடைபெற்ற பொதுத்தேர்தலில் காங்கிரசுக்கட்சி தமிழ்நாடு உட்பட 9 மாநிலங்களில் படுதோல்வி கண்டது. நாடாளு மன்றத்திலும் தனது பெரும்பான்மையை இழந்து வலுவிழந்தது. இதன்காரணமாக 8-1-1968-ல் 'ஆட்சி மொழித் திருத்தச் சட்டத்தைக்' காங்கிரசுக்கட்சி நிறைவேற்றியது.

1968-ஆம் ஆண்டு ஆட்சி மொழித் திருத்தச் சட்டத்தின் மூலம் ஆங்கிலம் சில குறிப்பிட்ட செயல்களுக்காக மட்டும் பயன் படுத்தப்படும் கூட்டு ஆட்சி மொழியாக ஆக்கப்பட்டது. உண்மையான கூடுதல் ஆட்சிமொழியாக ஆக்கப்படவில்லை. நேரு பெருமான் 1959-ஆம் ஆண்டு மக்கள் சபையில் அளித்த வாக்குறுதி ஆட்சி மொழித் திருத்தச் சட்டத்தில் இடம் பெற வில்லை.

## அண்ணா தந்த இருமொழித் திட்டம்

தமிழகத்தின் முதல்வராக அண்ணா தேர்ந்தெடுக்கப் பட்டார். 23-1-1968 ல் அண்ணா தமிழக சட்ட மன்றத்தில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றினார். அத்தீர் மானமாவது: இனி தமிழ் நாட்டு மக்கள் தமிழ், ஆங்கிலம், இந்தி என்ற மூன்று மொழிகள் பயிலத் தேவை இல்லை. இரண்டு மொழிகள் மட்டும் பயின்றால் போதும். ஒன்று தாய் மொழியாம் தமிழ். மற்றொன்று அனைத்துலகத் தொடர்பு மொழியாகப் பயன்படும் ஆங்கிலம்.

## சட்ட மன்றத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மான வடிவம்

பல்வேறு மொழி, பண்பாடு, நாகரிகங்கள் கொண்ட இந்தி யாவில், ஒருவட்டார, மொழியைமட்டும் ஆட்சிமொழியாக்குவது இந்திய ஒற்றுமையையும், ஒருமைப்பாட்டையும் குலைத்து-ஒரு பகுதி மக்கள் மற்ற மொழிப் பகுதி மக்களை அடிமைகொள்ளச் செய்வதாகும். இவ்வுண்மை நன்கு உணரப்படுவதால் தமிழும் மற்ற தேசிய மொழிகளும்-மத்திய ஆட்சி மொழியாக ஏற்றுக்

கொள்ளப்பட்டு- அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும். அது வரை ஆங்கிலம் ஆட்சி மொழியாகத் தொடர்ந்து இருக்க வேண்டும். அதற்கு ஏற்றபடி அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டுமென்று இம்மன்றம் வற்புறுத்துகிறது. மத்திய அரசின் இந்தித் திணிப்பை இம்மன்றம் ஏற்க மறுக்கிறது.

மத்திய அரசின் மொழித் தீர்மானத்தை இந்த அரசு செயல் படுத்த மறுக்கின்ற வகையிலும், தமிழக மக்களும், மாணவர் களும் வெளியிட்டுள்ள கருத்துக்கு மதிப்பளிக்கின்ற வகையிலும் தமிழகத்தின் எல்லாப் பள்ளிகளிலும் மும் மொழித் திட்டம் அகற்றப்பட்டு, தமிழ், ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளுக்கு இட மளித்து இந்தி மொழியை அறவே நீக்கிவிட இம்மன்றம் தீர் மானிக்கிறது.

என். சி. சி. முதலிய அணிகளில் பயன்படுத்தப்பட்டுவரும், இந்தி ஆணைச் சொற்களை நீக்குவதென்றும், இதற்கு மத்திய அரசு ஒப்புதல் அளிக்க மறுத்தால், என். சி. சி. போன்ற அணி களைக் கலைத்து விடவும் இம்மன்றம் தீர்மானிக்கிறது.

## மீண்டும் வேதாளம் முருங்கை மரம் ஏறுகிறது

1978-ஆம் ஆண்டு அப்போது தலைமை அமைச்சராக இருந்த மொரார்ஜி தேசாய் - தமிழகத்தில் இந்தி எதிர்ப்புக் குதிரை செத்துவிட்டது என்று ஏளனம் செய்தார். இதைக் கண்டித்துத் திராவிடக் கழகப் பொதுச் செயலாளர் கி. வீரமணி தலைமையில்—அனைத்துக் கட்சி இந்தி எதிர்ப்பு மாநாடு நடத் தப்பட்டது. மாநாட்டில், தலைமை அமைச்சரின் இந்தி வெறிக்குக் கடும் கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

1978-ஆம் ஆண்டு திசம்பரில் - திருச்சியில் திராவிட முன் னேற்றக் கழகம் இந்தி எதிர்ப்பு மாநாடு நடத்தியது. மாநாட் டில் தமிழையும், மத்திய ஆட்சி மொழியாக்க வேண்டுமென்று கோரிக்கை வைக்கப்பட்டது.

13-9-1984-ல் நாக்பூரில் இந்திய மாணவர் சங்க மாநாட்டைத் தொடங்கி வைத்து மறைந்த பிரதமர் இந்திராகாந்தி அவர்கள் உரையாற்றினார்கள். அவர் உரை வருமாறு: இணைப்பு மொழி நாட்டுக்கு அவசியமானது. மற்ற நாடுகளிலெல்லாம் பல மொழிகள் பேசப்படுகின்றன. கற்றுக் கொள்ளப்படுகின்றன. ஆனால், அங்கெல்லாம் ஒரு மொழி தான் ஆட்சி மொழியாக இருக்கிறது, அது போன்று இந்திய மொழிகளுக்கெல்லாம் சமத்துவம் தந்து வளர்ச்சி அடைய நடவடிக்கை மேற்கொள்ளப்படுகின்றன. ஆனால், நடைமுறைக் காரணங்களினால் இந்தி மொழி ஒன்று மட்டும்தான் இணைப்பு மொழியாக முடியும் என்று வெளிப்படையாகப் பேசினார்கள்.

2-2-1985-ல் ஆட்சி மொழித்துறை ஏற்பாடு செய்திருந்த கருத்தரங்கில் பல கருத்துகள் நடைமுறைக்கென வலியுறுத்தப் பட்டுள்ளன. இக் கருத்தரங்கில் பேசிய மத்திய உள்துறைத் துணை அமைச்சர் திருமதி ராம்துலாரி சின்ஹா பேசும்போது— நாட்டின் ஆட்சிமொழி என்ற முறையில் இந்திக்கு உரிய முக்கியத்துவம் மத்திய அரசு அளிக்குமென்று கூறியுள்ளார். மாநாட்டில் பேசிய மத்திய விமானப் போக்குவரத்து இணை அமைச்சர் கெல்லாட் இந்தியை ஆட்சி மொழி ஆக்குவது ஒவ்வொரு குடிமகனின் கடமையாகும் என்றும் கொக்கரிப்பு செய்துள்ளார்.

## தொலைக்காட்சியில் இந்தித் திணிப்பு

இந்தி மொழியை வேகமாகத் திணிக்கும் விபரீத விளையாட்டில் மைய அரசு இறங்கியுள்ளது. சென்னைத் தொலைக் காட்சி நிலையம் இதுவரை தமிழ் நிகழ்ச்சிகளை 3 மணி நேரமும், தேசிய நிகழ்ச்சிகள் என்ற போர்வையில் இந்தி நிகழ்ச்சிகளை இரண்டரை மணி நேரமும் ஒளிபரப்பிவந்தது.

கடந்த 10-3-1985 முதல் இரவு 8.30 மணி முதல் 9,00 மணிவரை தமிழ் நிகழ்ச்சிகள் ஒளிபரப்புவதை மாற்றி இரவு

8.30 மணிக்கே தேசிய நிகழ்ச்சிகள் எனக்கூறி இந்தி நிகழ்ச்சி களை ஒளிபரப்பிவருகிறது.

1982-ஆம் ஆண்டு தொலைக்காட்சி ஒளிபரப்பு விரிவு படுத்தப்பட்டபோது இதுபோன்ற நிலை உருவானது. அப் போது தமிழகத்தில் ஏற்பட்ட கொந்தளிப்பின் காரணமாக, தேசிய நிகழ்ச்சிகளின் நேரம் மாற்றி அமைக்கப்பட்டது.

18-3-1985 அன்று தமிழக மேலவையில் மாநில மக்களின் உணர்வுகளுக்கு உத்தரவாதம் அளிக்கும் வகையில் நேரு அளித்த இரு மொழிக்கொள்கை அரசியல் சட்டத்தில் இடம் பெற வேண்டுமென்று கலைஞர் மு. கருணாநிதி கூறிய கருத்துகள் பாராட்டத்தக்கவை.

19-3-1985 அன்று செய்தித் துறை அமைச்சர் ஆர். எம். வீரப்பன் அவர்கள் சட்டசபையில் தமிழ்நாட்டுத் தொலைக்காட்சி, வானொலி நிலையங்களில் தயாரிக்கப்படும் நிகழ்ச்சிகள் தமிழ்ப் பண்பாட்டுக்கு உகந்ததாக இல்லை என்றும், இந்நிலை நீடித்தால் நாட்டின் ஒற்றுமை பற்றியே கவலைப்பட வேண்டியதுவரும் எனவும் கூறிய கருத்துகள் வரவேற்கத்தக்கன.

## தலைநகர் தமிழ்ச் சங்கத்தின் பங்கு

13-11-84 ல் சென்னை தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகக் கட்டிடத்தில், தலைநகர் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் இந்தித் திணிப்பு எதிர்ப்பு ஆய்வுக் கருத்தரங்கம் நடை பெற்றது. கருத்தரங்குக்குப் பேராசிரியர் மெ. சுந்தரம் தலைமை தாங்கினார். கருத்தரங்கைத்தொடங்கி வைத்து, பேராசிரியர், செ. கந்தப்பன், மிசா. ஆர். கணேசன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

தமிழ்ப்பா நிலவு த. கோவேந்தன், மயிலை க. திருநாவுக் கரசு, கவிஞர் இரா. அகவழகன், புலவர் நக்கீரன், புலவர் த. சுந்தரராசன், அரணமுறுவல் ஆகியோர் இந்தித் திணிப்பின் பல்வேறு கூறுகளை ஆய்ந்து, ஆய்வுக் கட்டுரை படித்தனர், கூட்ட முடிவில் புலவர் பெ. மா. முருகேசன் நன்றி கூறினார்.

26-3-1985 அன்று மாநிலங்களவையில் இந்தித் திணிப்பைக் கண்டித்துத் தமிழகத்தைச் சார்ந்த உறுப்பினர்கள் கண்டனக் குரல் எழுப்பினர். விவாதத்தில் குறுக்கிட்ட இந்திரா காங்கிரஸ் உறுப்பினர், கொஞ்சம், கொஞ்சமாக நீங்கள் எப்படியும் இந்தியைப் படித்துத்தான் ஆகவேண்டுமென ஆணவமாகக் கூறியகருத்து, வேதனைக்குரியதாகும்.

விவாதத்தில் கலந்துகொண்ட வை. கோபால்சாமி அவர்கள், இந்தியை எதிர்த்துச் சிறைசென்றவர்கள் நாங்கள். உங்கள் ஆதிக்கத்தை முறியடிப்பதுதான் எங்களது கொள்கை என முழக்கமிட்டுள்ளது, அண்ணாவினது குரலின் பிரதிபலிப் பெனலாம்.

28-3-1985 அன்று மக்களவையில் இந்தி மொழி உபயோகம் பற்றிய கருத்து மோதலில் தி. மு. க., அ. இ. அ.தி.மு.க. உறுப்பினர்கள் ஒரு பக்கமும், இந்தி பேசுகின்ற பகுதியைச் சார்ந்த இந்தி வெறியர்கள் ஒருபக்கமும் நின்று வாதிட்டனர். சுற்றுலாத் துறை அமைச்சரின் இந்தி வெறியைக் கண்டித்து மோகனரங்கம் குரல் கொடுக்க, வை. கோபால்சாமி அதனை ஆதரித்தார். இந்தி எதிர்ப்பில் ஒற்றுமை உணர்வையே இது காட்டுகிறது.

31-3-1985 அன்று சண்டிகார்—பஞ்சாப் பல்கலைக் கழக 37-வது பட்டமளிப்பு விழாவில் கலந்துகொண்டு சிறப்புரை ஆற்றிய குடியரசுத் தலைவர் ஜெயில்சிங் எல்லா மட்டங்களிலும் இந்தி மொழியினைப் புகுத்தி தேசிய மொழியாக இந்தியினை அரியணை ஏற்ற வேண்டுமென்று குறிப்பிட்டுள்ளார். மேலும் சர்வதேச அரங்கில் இந்தி இன்னும் உரிய இடத்தை எட்ட முடியவில்லை என்று ஆதங்கப்பட்டுள்ளார். குடியரசுத் தலைவருக்கு இருக்கின்ற மொழிப்பற்று இதர மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டவர்களுக்கும், இருக்குமென்பது, தெரிந்திருக்கும். குறிப்பாகத் தொன்மை வாய்ந்த தமிழைத்

தாய் மொழியாகக் கொண்ட தமிழர்களின் உணர்வுகள் குடியரசுத் தலைவரின் உணர்வுக்குச் சற்றும் குறைந்ததல்ல.

## ஆட்சி மொழித் திருத்தச் சட்டம் பற்றிய சில கருத்துகள்

### ஆட்சிமொழிச் சட்டத்தில் ஆங்கிலத்தின் இடம் :-

இந்தியத் துணைக் கண்டத்தில் காங்கிரசுக் கட்சி ஆட்சிப்பொறுப்பை ஏற்றுக்கொண்ட நிலையில் 1965 ஆம் ஆண்டு வரை ஆங்கிலம் இந்தியாவின் துணை மொழியாக இருந்தது. ஆங்கிலம் இந்தியாவின் கூடுதல் ஆட்சி மொழியாகவோ! இணை மொழியாகவோ ஏற்றுக்கொள்ளப்பட வில்லை.

1968-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட ஆட்சிமொழித் திருத்தச் சட்டத்தின் மூலமாக— ஆங்கிலம் சில குறிப்பிட்ட செயல்களுக்கு மட்டும் 'கூடுதல் ஆட்சிமொழி' என்ற நிலைக்கு வகை செய்யப்பட்டது. இந்நிலையையும் ஒரு பாராளுமன்றச் சட்டத்தின் மூலம் எப்போது வேண்டுமானாலும் அகற்றி விடலாம்.

'ஆங்கிலம்' என்ற சொல் கைவிடப்பட்டு, இப்போதைக்கு 'அலுவல் நடப்புக்கென இருக்கின்ற மொழி' என்று மட்டும் சொல்லப்படுகிறது. தென்மாநிலங்களில் எல்லா மத்திய அரசு அலுவலகங்களிலும் ஒரு குறிப்பிட்ட விழுக்காடு பயன்படுத்தப்பட்டுவருகிறது. வடமாநிலங்களில் ஆங்கிலம் அலுவல் நடப்புக்குப் பயன்படுத்தப்படுவதில்லை; முழுக்க முழுக்க இந்தியிலேயே அலுவல்கள் நடைபெறுகின்றன.

## ஆட்சிமொழிச் சட்டத்தில் இந்தியின் இடம்

இந்தியாவில் உள்ள எல்லா அரசு நடவடிக்கைகளும் இந்தி மொழியிலேயே நடைபெறவேண்டும் என்று சட்டத்தின் மூலம் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது. இந்தி மொழியின் வளர்ச்சிக்கும் ஆதிக்கத்துக்கும் வலுக்கட்டாயமாகப் பல நடைமுறைகள் கடைப்பிடிக்கப்பட்டுவருகின்றன.

## இந்தி திட்டப் பொருள்

ஆட்சிமொழி என்ற தகுதியோடு இருந்த 'இந்தி' இன்று திட்டப்பொருளாக ஆக்கப்பட்டுவிட்டது. இந்தி திட்டப் பொருள் ஆகிவிட்டது என்றாலே— ஒரு குறிப்பிட்டகால வரையறைக்குள், அனைத்து மாநிலங்களிலும் அவை விரும்பியோ, விரும்பாமலோ—இந்தி மொழியானதுவிரைவாகப் பரப்பப்படும் என்பதுதான் பொருள்.

## பொதுப் பட்டியலில் கல்வி

அண்மைக்காலம் வரையில், மாநில அரசின் அதிகாரப் பட்டியலில் கல்வி இருந்துவந்தது. தற்போது அரசியல் சட்டத் திருத்தத்தின்மூலம் கல்வி பொதுப் பட்டியலுக்கு மாற்றப் பட்டுவிட்டது. இதன் மூலம் கல்வியை இந்தியத் துணைக் கண்டம் முழுதும் செயல்படுத்துவதற்கு மத்திய அரசு— அடிப்படைக் கோட்பாடுகளையும், நடைமுறைத் திட்டங் களையும் வகுக்க, தனிச்சட்டங்களையும், ஆணைகளையும் இயற்றக்கூடிய அதிகாரம் பெற்றுள்ளது. மத்திய அரசு உள்சட்டம் இயற்றினால், அதற்கு எதிராக—மாநிலச் சட்ட மன்றம் சட்டங்களையும், நெறி முறைகளையும் வகுத்தாலும் அவை செயலிழந்து போகும்.

இந்நிலையில் தமிழக அரசின் இரு மொழிக்கொள்கை அல்லது தமிழக அரசின் இன மொழிக் கொள்கை, மத்திய அரசு புதிய சட்டம் இயற்றும் வரைதான் உயிரோடு இருக்கும். பின்னர் தானாகவே செயலிழந்து போகும்.

## இந்தியைப் பரப்ப ஆய்வுக் குழு

இந்தியை ஆட்சிமொழியாக்குவதற்கும் இந்தி பேசாத மக்கள்மீது இந்தியைத் திணிப்பதற்கும்— உள்ளாட்சி அமைச் சகத்தின், மொழித் துறையில் ஆய்வுக்குழு ஒன்று செயல் பட்டுவருகிறது.

உள்ளாட்சித் துறை, மொழித் துறையின் 1981-1982-ஆம் ஆண்டு அறிக்கையில் 68-ஆம் பக்கத்தில் சொல்லப்பட்டிருப்ப தாவது: இந்தி பேசாத தமிழ்நாடு, பாண்டிச்சேரி உள்ளிட்ட மத்திய அரசு அலுவலகங்களில் எழுதப்படும் கடிதங்களில் குறைந்தது பத்து விழுக்காடு கடிதங்களையாவது இந்தியில் எழுத வேண்டுமென்று குறிப்பிடப்பட்டுள்ளது.

1984—1985-ஆம் ஆண்டுகளில் இந்தியைப் பரப்ப ஆய்வுக் குழு மேற்கொண்டுள்ள பணிகளாவன :

> இந்தியால் கையொப்பமிடுகின்ற பன்னாட்டு ஒப்பந்தங்கள், உறுதி மொழிகள் ஆகியவை இந்தி, ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் உருவாக்கப்பட வேண்டும்.
>
> இந்தியைப் பரப்புவது பற்றிய கலந்துரையாடல், கருத்தரங்கு நடத்துதல். இந்தியைப் பரப்பும் வாரம் நாடெங்கணும் கொண்டாடுதல்.
>
> ஒவ்வோர் அரசுத் துறையிலும் ஒரு குறிப்பிட்ட விழுக்காடு இந்தி தட்டச்சுப் பொறிகளை வாங்கவகை செய்தல்.

இந்நிலையில் 24-9-1984-ல் புது தில்லியில் கூடிய 'இந்தி வளர்ச்சி உயர்மட்டக்குழு' சிலஅமைச்சகங்களும், அரசுத்துறை களும் மொழிச்சட்டத்தை நடைமுறைப்படுத்த முன்வரவில்லை என்று குறைபட்டுக்கொண்டது.

## வெளிநாடுகளில் இந்தி வளர்ச்சி பற்றிய ஆய்வுக் குழு:-

வெளிநாடுகளிலுள்ள இந்திய அரசு அமைப்புகளில் இந்தி ஆட்சிமொழியாவது எந்த அளவுக்கு நிறைவேறி இருக்கிறது என்பதை ஆய்வு செய்ய குழு அமைக்கப்பட்டுள்ளது. இந்தக்

குழுவில் இந்தி பேசாத மாநிலப் பாராளுமன்ற உறுப்பினர்களும் இடம் பெற்றுள்ளனர். குறிப்பாக, தமிழகத்திலுள்ள நாடாளுமன்ற உறுப்பினர்கள் இக்குழுவில் இடம் பெறச் செய்திருப்பது தமிழக மக்களை மனமறிந்தே ஏமாற்றுகின்ற செயலாகும்.

## இலவச வெளியீடுகள்

1982—1983-ஆம் ஆண்டு, கல்வி அமைச்சகத்தின் மத்திய இந்தி இயக்ககம் 'இந்தி பேசாத பகுதியில் உள்ள கல்வி நிறுவனம், மற்றும் தொண்டு நிறுவனங்களுக்கு, ரூ 5,85,000 மதிப்புள்ள இந்திப் புத்தகங்கள், இதழ்கள் ஆகியவற்றை இலவசமாக வழங்கியுள்ளது. இதுபோன்ற உதவிகள் ஆண்டு தோறும் நடைபெற்றுவருகின்றன.

## தமிழகத்தின் தற்போதைய நிலை

தமிழகத்திலுள்ள மத்திய அரசு நிறுவனங்களான அஞ்சல் துறை, தந்திப்பிரிவு, இந்திய உணவுக்கழகம், இந்திய ஆயில் கம்பெனி, துறைமுகத்துறை, வங்கிகள், தென்னிந்திய இரயல்வே போன்ற துறைகளிலும் மற்றும் பல்வேறு துறைகளிலும் இந்தி தெரிந்தவர்க்கே முன்னுரிமை என்பது நடைமுறைக்கு வந்துவிட்டது. மேற் குறிப்பிட்ட துறைகளில் வேலை நேரத்திலேயே அன்றாடம், தகுதிவாய்ந்த இந்தி ஆசிரியர்களை வைத்து இந்தி கற்பிக்கப்படுகிறது.

அஞ்சல், தந்தி, வங்கி ஆகிய துறைகளில், விண்ணப்பங்கள் படிவங்கள் உள்ளிட்ட அனைத்தும் ஆங்கிலம், இந்தி ஆகிய இரண்டு மொழிகளில் மட்டுமே பயன்படுத்தப்படுகின்றன; தமிழுக்கு எந்த இடமும் அளிக்கப்படவில்லை.

## தட்சிண பாரத் இந்திப் பிரச்சார சபா

தமிழகத்தில் 'தட்சிண பாரத் இந்திப் பிரச்சார சபா' விரும்புவோருக்கு இந்தியைக் கற்றுத் தருகிறது. இதற்கு அரசு மானி

யமும், அருட்பார்வையும் உண்டு. இந்த அமைப்பின் மூலம் 1982-ஆம் ஆண்டில், சென்னை மாநகரில் மட்டும் 13,162 பேர் இந்தித் தேர்வு எழுதியுள்ளனர். வெளியூரில் 29,944 பேர் தேர்வு எழுதியுள்ளனர். இந்தக் கல்வியாண்டில் இந்தி மேல் வகுப்புத் தேர்வு சென்னையில் மட்டும் 3,612 பேரும், வெளியூரில் 5,733 பேரும் தேர்வு எழுதியுள்ளனர். இவ்வமைப்பைக் கட்டுப்படுத்த தமிழக அரசுக்கு அதிகாரம் இல்லை.

## ஆங்கிலப் பள்ளி வாயிலாக இந்தி ஆதிக்கம்

தமிழ் நாட்டில் தமிழ் ஆட்சி மொழி ஆக்கப்பட்டு 27 ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. நகர்ப்புறங்களிலும், தொழில் நகரங்களிலும், பேரூர்களிலும் குழந்தைப் பள்ளிகளும், ஆங்கிலப் பள்ளிகளும் பல்கிப் பெருகி வளர்ந்து வருகின்றன. இவற்றின் வாயிலாய் இந்தி மொழி கற்பிக்கப்படுகிறது. குழந்தைப் பள்ளிகளையும் ஆங்கிலப் பள்ளிகளையும் கட்டுப்படுத்த அதிகாரம் இருந்தும், தமிழக அரசானது மனமறிந்தே தமிழ் மக்களுக்குத் துரோகம் செய்கிறது,

## மும் மொழித் திட்டம் ஒரு மோசடியே

இந்தியாவின் தலை நகராகிய தில்லிமாநகர், இந்தியாவில் பல்வேறு இன, மொழி மக்களின் உணர்வுகளைப் பிரதிபலிக்கும் இடமாகத் திகழ வேண்டும். ஆனால், தில்லி மாநகரில் இந்தி மொழி மட்டுமே கற்பிக்கப்படுகிறது. எனவே, மும் மொழித் திட்டம்தான் செயல்படுகிறது என்பது ஒரு மோசடி வேலை என்றால் அது மிகையாகாது.

## நேருவின் உறுதி மொழி நீரில் எழுதப்பட்ட எழுத்து

பண்டித நேரு இந்தி திணிக்கப்படமாட்டாது என்று உறுதி மொழி தந்தார். இந்நிலையில் 19-2-1976-ஆம் ஆண்டு பிறப்பிக்கப்பட்ட அரசாணை என்ன சொல்கிறது. இந்தி தெரியாத மத்திய அரசு ஊழியர்கள் ஒழுங்காக இந்தி வகுப்புக்குச் செல்ல வேண்டும், இந்தித் தேர்வுகளை எழுத வேண்டுமென்றும்

முற்றிலும் கட்டாயப்படுத்துகிறது. எனவே, இந்தி பேசாத மாநில மக்களை — அனைத்திந்தியத் தலைவர்கள் இன்று ஏமாற்றுகிறார்கள். ஆகவே, இந்தியைத் திணிக்கமாட்டேன் என்னும் நேருவின் உறுதிமொழி வெறும் கண்துடைப்பு அலங்கார வார்த்தைகளே என்றால் மிகையாகாது.

## போராட்டம் உணர்த்தும் உண்மைகள்

கடந்த 54 ஆண்டுகளாக ஆட்சிமொழியைப் பரப்புதல் என்ற பெயரால், இந்தித் திணிப்பை இந்திய அரசு தீவிரமாகச் செயல்படுத்திவருகின்றது. இந்தியத் துணைக் கண்டம் விடுதலை பெறுவதற்கு 25ஆண்டுகளுக்கு முன்பிருந்த ஆங்கிலத் துக்கு மாறாக, இந்தியை இந்தியாவின் பொதுமொழியாக்கிவிட வேண்டுமென்று காங்கிரசுக் கட்சி பல முயற்சிகளை மேற் கொண்டுள்ளது. வளமில்லாத ஒரு வட்டார மொழி, பொது மொழி ஆவதற்குத் தகுதியில்லை எனத் தமிழகம் அவ்வப்போது எதிர்ப்புக் குரல் கொடுத்ததோடு பல்வேறு போராட்டங்களை யும் நடத்தியுள்ளது. இப்போராட்டங்களினால் இந்தி ஆட்சி மொழி எனப் பிரகடனப்படுத்துவது தள்ளிப் போடப்பட்டுக் கொண்டு வரப்படுகிறது. ஆனால், உண்மையான ஆட்சிமொழி யாகத்தான் இருந்துவருகிறது.

## இறுதித் தேர்வு

நாடாளு மன்ற இரு அவைகளிலும் 15 தேசிய மொழிகளும் நடைமுறையில் மேற் கொள்ளப்பட வேண்டும்; அதாவது, நாடாளு மன்ற உறுப்பினர் களுக்கு மாநில மொழிகளில் நடவடிக்கைகள் தரப்பட வேண்டும்.

ஒரு மாநில எல்லைக்குள் இயங்கும், மத்திய அரசு நிறுவனங்கள் அனைத்திலும்—அந்த மாநிலத் தின் ஆட்சி மொழி மட்டுமே அலுவல் மொழியாகச் செயல்படவேண்டும்.

அரசமைப்புச் சட்டத்தின் ஆட்சி மொழிப் பிரிவு எட்டாவது அட்டவணையில்—ஆங்கிலம் இந்தியாவின் தேசிய மொழியாக ஏற்றுக்கொள்ள திருத்தம் செய்யப் படல் வேண்டும்.

இந்தி பேசாத மாநிலங்களிலிருந்து தேர்ந்தெடுக் கப்பட்ட பாராளு மன்ற உறுப்பினர்கள்—கட்சிக் கட்டுப்பாட்டைக் கடந்து அரசமைப்புச் சட்டத்தில் மொழிச் சட்டத் திருத்தத்துக்குச் செயுலாற்ற வேண் டும். தமிழ் நாட்டுப் பாராளுமன்ற உறுப்பினர்கள் இதற்கு வழிகாட்டவேண்டும்.

மேற் சொன்ன கோரிக்கைகளை முன்வைத்து உயிரைத் துச்சமென மதித்துப் போராட எவரெவர் முன்வருகின்றனரோ அவர்களால் மட்டுமே இந்தித் திணிப்பைத் தடுத்திட முடியும். மீண்டுமொரு மொழிப்போர் ஏற்பட திராவிட இயக்கங்கள் வழிகாணட்டும், செந்தமிழ்த் தாய் சிந்தை மகிழட்டும்.



# அடுத்த வெளியீடுகள்

வரலாற்றுப் பெட்டகமாய்
வண்டமிழர் கருவூலமாய்த்
தீந்தமிழ்த் தேனமுதாய்த்
தயாராகிக்கொண்டிருக்கிறது

## தமிழ்நாடு
## பெயர் மாற்ற வரலாறு!

போற்றிப்
பாதுகாக்க வேண்டிய
புகழ்மிகு ஓவியமாய்
இன உணர்வின்
எழுச்சிக் காவியமாய்
உருவாகிக்கொண்டிருக்கிறது

## திராவிட இயக்கமும்
## இன உணர்வும்!

**வளரசுப் பதிப்பகம்**
**9, வெங்கட்டராமன் தெரு**
**தேனாம்பேட்டை, சென்னை-600 018.**

Wrapper Printed at Eskay Art Printers, Madras-5 Phone: 841478